ஸ்ரீ ராமாநுஜன் 307



ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 26 | 1974 மார்ச் மாத வெளியீடு | ஸஞ்சிகை 7

# எண்டிசையும் கொண்டாடும் நாள்

மணவாள மாமுனிகள் உபதேசரத்ன மாலையில் திருப்பாணாழ்வாருடைய திருவவதார நக்ஷத்ரமாகிய கார்த்திகையுரோகிணிநாளைப்பற்றி அருளிச்செய்கையில் "நன்குடனே கொண்டாடும் நாள்" என்றார். மன்னியசீர் மார்கழியில் கேட்டையன்று திருவவதரித்த தொண்டரடிப்பொடியாழ்வாரைப் பற்றின பாசுரத்தில் "நான்மறையோர் கொண்டாடும் நாள்" என்றார். தையில் மகத்தன்று திருவவதரித்த திருமழிசைப்பிரானைப்பற்றின பாசுரத்தில் 'நற்றவர்கள் கொண்டாடும் நாள்' என்றார். மாசிப் புனர்பூசத்தன்று திருவவதரித்த குலசேகராழ்வாரைப் பற்றின பாசுரத்தில் "நல்லவர்கள் கொண்டாடும் நாள்" என்றார். சித்திரையில் செய்ய திருவாதிரையில் திருவவதரித்த எம்பெருமானாரைப் பற்றின பாசுரத்தில் "நாற்றிசையும் கொண்டாடும் நாள்" என்றார். நாற்றிசைக்குமேல் எண்டிசையும் உள்ளதன்றோ! எண்டிசையும் கொண்டாடும் நாளாக ஒருநாள் அமையவேண்டுமல்லவா? அந்தநாள் மாசிதன்னிற் சோதிநன்னாள் என்று கொள்ளலாம்.

காஞ்சிமாநகரில் வித்வத் ஸார்வபௌமராயும் சிஷ்யப்ருந்த ஸம்பந்நராயும் தென்னாடு வடநாடுகளில் மிக்க ப்ரஸித்தியை யுடையராயும் எழுந்தருளி யிருந்து முப்பத்தெட்டு வருஷங்களுக்கு முன்பு (தாது வருஷத்தில்) திருநாடலங்கரித்த ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் ஜகத்குரு காதி அனந்தாசாரியர் திருநாமத்தைக் கேட்டறியாதார் இல்லை. அந்த ஸ்வாமியை நேரில் ஸேவித்தவர்கள் இற்றைக்கும் பல

ருளர். வடநாட்டிற்போலவே தென்னாட்டிலும் யானை, குதிரை, ஒட்டகம் முதலிய பரிவாரங்களுடன் திவ்யதேச யாத்திரை செய்தருளினபோது தென்னாடு முழுவதும் ஸ்ரீ ஸ்வாமியை ஸேவிக்கப் பெற்றுள்ளது. அந்த மஹாபுருஷருக்கு இப்போது சதாப்தீ மஹோத்ஸவம் நடைபெற்றது. இதைப்பற்றி மேலே விரிவான கட்டுரைகள் வெளிவருகின்றன. ஸ்ரீ ஸ்வாமி திருவவதரித்தது ஸ்ரீமுக ஸம்வத்ஸரத்திலாதலால் முப்பத்தெட்டு வருஷங்களுக்கு முன் கடந்த ஸ்ரீமுக வருஷத்தில் ஸ்ரீ ஸ்வாமிக்கு ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் மிகச்சிறப்பாக நடைபெற்றது. அப்போதும் இப்போதைய நிகழ்ச்சியின் வைபவங்களுக்குக் குறைந்தபாடில்லை. அதற்குப் பூர்வாங்கமாக நான் ஸ்ரீ ஸ்வாமி விஷயமாக கத்யப்ரபந்தமொன்றும் பத்ய ப்ரபந்தங்கள் ஐந்தும் இயற்றி தேவநாகரலிபியில் அச்சிட்டு ஷஷ்ட்யப்தபூர்த்தி வித்வத்ஸதஸ்ஸில் அரங்கேற்றி யிருந்தேன். கத்ய ப்ரபந்தத்தில் ஸ்ரீ ஸ்வாமியினுடைய சரித்திரம் பெரும்பாலும் பூர்த்தியாக எழுதப்பட்டது. ஆனாலும் அது ஸம்க்ஷிப்தமே. பத்யபத்தமான ப்ரபந்தங்கள் ஐந்தாவன: (1) மங்களாசாஸன ஸ்துதி, (2) ப்ரபத்தி ஸ்துதி, (3) ஸுப்ரபாத ஸ்துதி, (4) திநசர்யா ஸ்துதி, (5) பொதுவாக ஒரு ஸ்தோத்திரம். இவ்வாறு ப்ரபந்தங்களும் நெடுநாளாகவே துர்லபங்களாய்விட்டன. அவற்றை இப்போது புநர்முத்ரணம் செய்து நம்முடைய வைதிகமனோஹரா பத்ரிகையில் வெளியிட்டாயிற்று. இம்மாத மனோஹராவில் அந்த ஸ்துதிமாலிகை உள்ளது. அந்த ஸஞ்சிகை கிடைக்கப்பெறாதவர்கள் அபேக்ஷையைத் தெரிவித்துக்கொண்டால் அவர்கட்கு இனாமாக அனுப்புவோம்.

இப்போதைய சதாப்தீ மஹோத்ஸவத்தில் நடத்தப்பட்ட வித்வத்ஸபையில் ஒவ்வொருநாளும் உபக்ரமத்தில் ஸ்ரீஸ்வாமி விஷயமான சித்ரகவித்வ ச்லோகங்களை விஜ்ஞாபித்து ஸம்ஸ்க்ருத பாஷையில் உபந்யாஸம் நடத்தப்பட்டது. அந்தச்லோகங்கள் உரையுடன் அடுத்த பத்திரிகையில் அல்லது வைதிக மனோஹராவில் வெளியிடப்படும்.

மாதந்தோறும் சில நக்ஷத்ரங்கள் இருமுறை வந்தே தீரும். இந்த ஸம்வத்ஸரத்தில் மாசி ஸ்வாதி இருமுறை வந்தது தைவாதீனம். நிகழும் மாசி மாதத்தில் ஸ்வாதீ நக்ஷத்ரம் முதலில் வந்தது போல் முடிவிலும் வருகிறது. இப்போது ஸ்வாதீ நக்ஷத்ரம் தொடங்கி சதாப்தீ மஹோத்ஸவம் நடைபெற்றது. பாம்பே நகரத்தில் பன்ஸவாடியில் திருவேங்கடமுடையான் ஸந்நிதியில் ஸ்வாதீ நக்ஷத்ரமீருகப் பத்து நாள் மஹோத்ஸவம் நடைபெறும்.

## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

சென்றவருஷம் வரையில் நமது ஸ்ரீராமாநுஜன் ஸஞ்சிகை யொன்றுக்கு அச்சுக்கூலியும் காகித விலையும் சேர்ந்து 250 முதல் 300 ரூபாய்வரையில் ஆகி வந்தது. இப்போது 600 ரூபாய்க்குக் குறையாமல் ஆகிறது. ஆனாலும் நாம் சந்தாத் தொகையை உயர்த்த விரும்பவில்லை. உள்ள சந்தாவை தயவுசெய்து காலந்தவறாமல் ஸரிவர அனுப்பவேணுமென்று நினைவூட்டப்படுகிறது.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பகவத்விஷயப் பதிப்பு பற்றிய விஜ்ஞாபனம்.

(ஸ்ரீ காஞ்சீ ப்ர. அண்ணங்கராசாரியர்)

**அன்பர்களே !**

பகவத்விஷய ஸ்ரீகோசம் அச்சிடவேண்டி ஆறுமாதகாலமாக அடியேனுடைய முயற்சியை ஏற்கனவே பலகால் விஜ்ஞாபனம் செய்திருக்கிறேன். அச்சுத்தாள் (Printing Paper) கிடைக்காததனால் இப்பதிப்பை ஆரம்பிக்கத்துணிவு இல்லாமலிருந்து இப்போதுதான் வெகுபரிச்ரமப்பட்டு 100 ரீம் வரையில் சேகரித்துக்கொள்ள முடிந்தது. முன்பு 30 ரூபாயில் வாங்கின ஒரு ரீம் பேப்பரை இப்போது 80 ரூபாய் கொடுத்து வாங்க நேர்ந்தது. அதுபற்றி விசாரமில்லை. இனி அச்சுக்காரியம் விரைவாகவே நடைபெறும். முதலில் நாம் உத்தேசித்திருந்தது திருவாய்மொழி மூலத்தையும் ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யானத்தையும் மட்டுமே அச்சிடுவதாக.

நான்கு மாதங்களுக்குமுன்பு, சென்னையில் (அடையாறு) வாழும் ஸ்ரீமான் உ.வே. V.S.R. சக்கரவர்த்தி ஐயங்கார், பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த இருபத்துநாலாயிரப்படி வ்யாக்யானத்தின் பதிப்புச்செலவைத் தாம் ஏற்றுக்கொள்வதாக முன்வந்து அட்வான்ஸாக 441 ரூபாயும் அளித்தபடியால் ஈடுமுப்பத்தாறாயிரப்படியோடு இருபத்துநாலாயிரப் படியையும் அச்சிடுவதாக அறுதியிட்டேன். அதன் பிறகு சில பெரியார்கள் ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி ஆகிய இந்த வ்யாக்யானங்களும் லோபமடையாதபடிக்கு இவற்றையும் சேர்த்து அச்சிட்டால் நலமாயிருக்குமென்று தெரிவித்தபடியால் அப்படியே செய்வதென்று முடிவுசெய்துவிட்டேன். ஜீயர் அரும்பதவுரையும் சேர்க்கவேணுமென்று சிலர் தெரிவித்தார்கள். அதுவும் அவசியமேயானாலும் இப்பதிப்பு முடிவதற்கு மிகவும் காலதாமதமாய் விடுமென்று அதைவிட்டு மேலேகுறித்த ஐந்து வ்யாக்யானங்களை மட்டுமே பதிப்பிப்பதாக முடிவுசெய்துகொண்டேன். ப்ரமாணத்திரட்டு மிகவும் அவசியமாதலால் அதை ஆங்காங்கு அச்சிடாமல் அகராதிவரிசையில் தனிப்பட அச்சிடுவோம். அவ்விதமாக அச்சிடுவது மிகவும் உபகாரகமாய் இருக்கும். அதை அடியேன் ஏற்கனவே பலவருடங்களுக்கு முன்பு தெலுங்கு லிபியில் அச்சிட்டிருக்கிறேன். அதை இப்போது தமிழ்லிபியில் அச்சிடுவேன்.

இப்பதிப்பின் ஸந்நிவேசம் பலருக்கும் தெரியும்படி ஒரு பாரம் மட்டும் (அதாவது 8பக்கம்) ஆதர்சரூபமாக (Sample) இத்துடன் சேர்க்கப் படுகிறது. இந்த ஒருபாரத்தில் சிலபக்கங்களில் மை நன்றாகப்படியாமல் இருக்கும். இது சரியான மிஷினில் அச்சிடாமல் சாதாரண Pressல் அச்சிட்டபடியால் இதை Proof Copyயாகவே கொள்ளவேண்டியது. பதிப்பு மிகவும் ஒழுங்கான முறையில் அச்சாகிவரும்.

இப்பதிப்புக்காக இதுவரையில் உபகரித்தவர்களின் திருநாமமும், தொகையும் வருமாறு.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸத்யஸங்கல்ப ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி | | ரூ. | 1,000 |
| ஸ்ரீமான் | உ. வே. S. க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் M. A., B. L., அட்வகேட், புத்தூர் | ... | 100 |
| ,, | உ. வே. A. ராமாநுஜாசாரியர் B.A., Madras-15 | ... | 50 |
| ,, | திருச்சேறை வெங்கடவரதன் B.A, B.L., Madras-34 | ... | 101 |
| ,, | K. R. ஸ்ரீநிவாஸாசார்யர், தர்மகர்த்தா, திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தானம். இவர் மேலும் உபகரிக்க உத்ஸாஹங்கொண்டிருப்பதாகத் தெரிவித்துள்ளார்.) | ... | 250 |
| ,, | V. S. R. சக்ரவர்த்தி ஐயங்கார் | ... | 441 |
| ,, | K. A. தேவராஜன் B.Sc., C.A. (Bhopal) | ... | 300 |
| ,, | T. A. திருவேங்கடாசாரியர் (New Delhi) | ... | 25 |
| ,, | உ. வே. R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், நேமத்தான்பட்டி | ... | 200 |
| ,, | P. B. ஸம்பத், Madras-1 | ... | 101 |
| ,, | A. K. சடகோபாசார்யர், Madras-53 | ... | 111 |
| ,, | K. சௌரிராஜன். M. B. B. S., Madras-35 | ... | 100 |
| ,, | S. துரைசாமி ஐயங்கார், Bangalore-11 | ... | 101 |
| ,, | K. ரங்கராகவன் (Sub Editor 'Hindu') Madras-4 | ... | 101 |
| ,, | T. கண்ணன், Madras-88 | ... | 100 |
| ஸ்ரீமான் | K. P. S. சுந்தரராஜன் செட்டியார், திருச்சிராப்பள்ளி | ... | 101 |
| ,, | K. V. சுப்பிரமணியன், Erode | ... | 101 |
| ,, | P. S. V. ராமாநுஜம் செட்டியார். Salem | ... | 101 |
| | | | 3,384 |

ஆக இப்பதிப்புக்காக இதுகாறும் வசூலாகி யிருக்கும் தொகை இவ்வளவே. ஆனல் நாம் வாங்கியிருக்கிற ப்ரிண்டிங் பேப்பரின் விலை இதற்கு இரட்டிப்பாக ஆகியுள்ளது. 8 பக்கம்கொண்ட ஒரு பாரத்திற்கு பேப்பர் சார்ஜ் எவ்வளவாகிறதோ அவ்வளவு அச்சுக்கூலி ஆகிறது. அதைப்பற்றி அடியேன் விரிவாக விளக்கவேண்டிய அவசியமில்லை. இரண்டு வருஷங்களுக்குள்ளாக இப்பதிப்பை முடிக்கவேணுமென்பது அடியேனுடைய மனோரதம். ஒவ்வொரு பத்தாக முடித்து வெளியிட்டுவரவேணுமென்றும் அப்போதப்போது அதன் விற்பனைத் தொகையைக்கொண்டு மேன்மேல் பத்துக்களை அச்சிட்டு வரவேணுமென்றும் உத்தேசம் கொண்டிருக்கிறேன். காகிதப் பஞ்சத்தினல் 500 பிரதிகள் மட்டுமே அச்சிடுவதாக முடிவுசெய்திருக்கிறது. 30 ரூபாய்க்கு குறையாமல் முன்னடியே (advance) உதவிசெய்து தங்கள் தங்கள் பெயர்களைப் பதிவுசெய்துகொள்ளுபவர்களுக்கே இந்த ஸ்ரீகோசம் எளிதாகக் கிடைக்கும். அட்வான்ஸ் செலுத்தாதவர்களுக்கு இப்பதிப்பு கிடைப்பது நிச்சயமில்லை.

தொகை அனுப்ப விலாஸம் ஏற்கனவே தெரிவித்திருப்பதுதான். அதாவது T. A. அக்காரக்கனி அனந்தாழ்வான், க்ரந்தமாலா ஆபீஸ், 14, தென்னண்டை மாடவீதி, காஞ்சீபுரம்-631503.

**உதாரர்கள் கணிசமான தொகை அளிக்க ப்ரார்த்திக்கப்படுகிறார்கள்.**

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# பகவத்விஷய வ்யாக்யானங்கள்

(திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச்செய்த ஆறுயிரப்படி; நஞ்சீயர் அருளிச்செய்த ஒன்பதினாயிரப்படி; வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்த பன்னீராயிரப்படி; பெரிய வாச்சான்பிள்ளை அருளிச்செய்த இருபத்துநாலாயிரப்படி; நம்பிள்ளை யருளிச்செயலை வடக்குத் திருவீதிப்பிள்ளை பட்டோலைகொண்ட ஈடுமுப்பத்தாறுயிரப்படி—ஆகிய ஐந்து வ்யாக்யானங்கள்).

# திவ்யப்ரபந்தப் பொதுத் தனியன்கள்

### அழகியமணவாளனருளிச் செய்தது

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்,
யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

### கூரத்தாழ்வான் அருளிச் செய்தவை

லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம்,
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.
யோ நித்ய மச்யுத பதாம்புஜ யுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே,
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

### ஆளவந்தார் அருளிச்செய்தது

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

### ஸ்ரீ பராசரபட்டரருளிச்செய்தது

பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்,
பக்தாங்க்ரிரேணு பரகாலயதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத் பராங்குச முநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

# திருவாய்மொழித் தனியன்கள்

## ஸ்ரீமந்நாதமுனிகள் அருளிச்செய்தது

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீ சடகோப வாங்மயம்,
ஸஹஸ்ரசாகோபநிஷத் ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிட வேதஸாகரம்.

## ஈச்வர முனிகள் அருளிச்செய்தது

திருவழுதி நாடென்றும் தென்குருகூரென்றும்
மருவினிய வண்பொருநலென்றும்—அருமறைகள்
அந்தாதி செய்தான் அடியிணையே எப்பொழுதும்
சிந்தியாய் நெஞ்சே தெளிந்து.

## சொட்டை நம்பிகள் அருளிச்செய்தது

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும்
இனத்தாரை யல்லா திறைஞ்சேன்—தனத்தாலும்
ஏதும் குறைவிலேன் எந்தை சடகோபன்
பாதங்கள் யாமுடைய பற்று.

## அனந்தாழ்வான் அருளிச்செய்தது

ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமாநுசமுனிதன்
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்த பெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந் தரிக்கும்
பேராத வுள்ளம் பெற.

## பட்டரருளிச்செய்தவை

வான்திகழுஞ்சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ்மறைக ளாயிரமும்—ஈன்ற
முதற்றாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமாநுசன்.

மிக்க விறைநிலையும் மெய்யா முயிர்நிலையும்
தக்க நெறியுந் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர்கோன்
யாழினிசை வேதத் தியல்.

## — உபதேச ரத்தினமாலைப் பாசுரங்கள் —

தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப் பிரான்
பிள்ளான்* எதிராசர் பேரருளால்—*உள்ளாரும்
அன்புடனே மாறன் மறைப்பொருளை அன்றுரைத்தது
இன்ப மிகு மாறாயிரம்.

தஞ்சீரை ஞானியர்கள் தாம்புகழும் வேதாந்தி*
நஞ்சீயர்தாம் பட்டர் நல்லருளால்*—எஞ்சாத
ஆர்வமுடன் மாறன்மறைப் பொருளை ஆய்ந்துரைத்தது*
ஏரொன் பதி னாயிரம்.

நம்பிள்ளை தம்முடைய நல்லரு ளாலேவியிட*
பின்பெரியவாச்சான் பிள்ளை யதனால்*—இன்பா
வருபத்தி மாறன் மறைப்பொருளைச் சொன்னது
இரு பத்து நாலாயிரம்.

தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறி தன்னை*
வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை*—இந்த
நாடறிய மாறன்மறைப் பொருளை நன்குரைத்தது*
***ஈடு முப்பத் தாறாயிரம்.***

அன்போடு அழகிய மணவாளச் சீயர்*
பின்போருங் கற்றறிந்து பேசுகைக்கா*—தம்பெரிய
போதமுடன் மாறன் மறையின் பொருளுரைத்தது*
ஏதமில் பன்னீ ராயிரம்.

### பகவத்விஷய காலக்ஷேபத் தனியன்கள்

நாதம் பங்கஜநேத்ரராமயமுநாவாஸ்தவ்ய மாலாதராந்
யோகீந்த்ரம் குருகேசசந்த்ரஜாதிம் கோவிந்தகூராதிபௌ,
பட்டார்யம் நிகமாந்தயோகிஜகதாசார்யௌ ஸக்ருஷ்ணத்வயௌ
வந்தே மாதவபத்மநாபஸூமந: கோலேச தேவாதிபாந்.

நமோ வேதாந்தவேத்யாய ஜகந்மங்களஹேதவே,
யஸ்ய வாகம்ருதாஸாரபூரிதம் புவநத்ரயம்.
வேதாந்த வேத்யாம்ருதவாரிராசே: வேதார்த்தஸாராம்ருதபூரமக்ர்யம்,
ஆதாய் வர்ஷந்தமஹம் ப்ரபத்யே காருண்யபூர்ணம் கலிவைரிதாஸம்.
ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே,
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப: ஸ்ரீதரஸ் ஸதா.
ஸ்ரீக்ருஷ்ணபாதபாதாப்ஜே நமாமி சிரஸா ஸதா,
யத்ப்ரஸாதப்ரபாவேந ஸர்வஸித்திர பூந்மம.
லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே,
ஸம்ஸாரபோகிஸந்தஷ்ட ஜீவஜீவாதவே நம:.
ச்ருத்யர்த்தஸாரஜநகம் ஸ்ம்ருதிபாலமித்ரம்
பத்மோல்லஸத்பகவதங்க்ரி புராணபந்தும்,
ஜ்ஞாநாதிராஜமபயப்ரதராஜபுத்ரம்
அஸ்மத்குரும் பரமகாருணிகம் நமாமி.
த்ராவிடாம்நாயஹ்ருதயம் குருபர்வ க்ரமாகதம்,
ரம்யஜாமாத்ருதேவேந தர்சிதம் க்ருஷ்ணஸூநுநா.
ஸுந்தரஜாமாத்ருமுநே: ப்ரபத்யே சரணாம்புஜம்,
ஸம்ஸாரார்ணவஸம்மக்ந ஜந்துஸந்தாரபோதகம்.
நமோஸ்து தேவராஜாய சதுர்க்ராம நிவாஸிநே,
ராமாநுஜார்யதாஸஸ்ய ஸுதாய குணசாலிநே.
நம:ஸ்ரீசைலநாதாய குந்தீநகரஜந்மநே,
ப்ரஸாதலப்தபரமப்ராப்யகைங்கர்யசாலிநே.
ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்,
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

***(இனி ஸ்வாசார்ய தனியன்களை அநுஸந்திப்பது)***

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# பகவத்விஷய வ்யாக்யானங்கள்

## திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச்செய்த ஆறுயிரப்படியின் அவதாரிகை.

அப்ராக்ருத ஸ்வாஸாதாரண திவ்யரூப பூஷணுயுதமஹிஷீ பரிஜநஸ்தாந விசிஷ்டனுய், நிகில ஜகதுதய விபவாதிலீலனுயிருந்த பரமபுருஷனை உள்ளபடியே ஆழ்வார் தாம் தம்முடைய திருவுள்ளத்தாலே அநுபவித்து அவ்வநுபவஜநிதமான நிரவதிக ப்ரீதியாலே அவனை அநுபவித்தபடியைப் பேசுகிருர்.

## நஞ்சீயர் அருளிச்செய்த ஒன்பதினுயிரப்படியின் அவதாரிகை.

இந்த ஜகத்தில், சிதசிதீச்வரர்களுடைய ஸ்வரூபஸ்வபாவங்களொன்றையும் அறியாதே, புருஷார்த்தோபாயங்களொன்றிலும் மூளாதே, சப்தாதிவிஷயங்களிலே மிகவும் மண்டி, பொறுக்கவும் கடக்கவு மொண்ணுதிருக்கிற ஸம்ஸாரது:கஸாகரத்திலே அழுந்தாநின்ற சேதநருக்கு "துர்லபோ மாநுஷோ தேஹோ தேஹிநாம் க்ஷண பங்குர:, தத்ராபி துர்லபம் மந்யே வைகுண்டப்ரிய தர்சநம்" என்கிற படியே புருஷார்த்தோபயோகியான மநுஷ்ய சரீரம் துர்லபம். இப்படி துர்லபமான சரீரத்தைப் பெற்ருலும் மோக்ஷேச்சை பிறக்கை அரிது; மோக்ஷேச்சை பிறந்தாலும் நிரதிசயஸுகரூபமாய் பகவத்குணுநுபவகாரிதமான தத்கைங்கர்யப்ராப்திரூபமோக்ஷேச்சை ஒருவர்க்கும் பிறக்கிறதல்ல. பாகவதசேஷதைகரதித்வாபாவம் கிம்புநர்ந்யாயஸித்தம். "கலௌ ஜகத்பதிம்" இத்யாதி ச்லோகத்திற்படியாலே மிகவும் கலிகாலத்தில் பகவத்ருசி ஒருவர்க்கும் பிறக்கிறதல்ல. இத்தன்மையை "மநுஷ்யாணும் ஸஹஸ்ரேஷு" இத்யாதி ச்லோகந்தாலே எம்பெருமான்தானும் அருளிச்செய்தான். இப்படியிருக்கிற ஸம்ஸாரத்திலே "ததோகில ஜகத்பத்ம" இத்யாதி ச்லோகத்திற் சொல்லுகிறபடியே ஜகத்தில் அஜ்ஞாநாந்தகாரமெல்லாம் நீங்கி லோகமெல்லாம் வாழும்படியாகச் சேதநர்பண்ணின பாக்யத்தாலே, ஆழ்வார் திருநகரியிலே வந்து திருவவதாரம் பண்ணியருளி, "ஹஸிதம் பாஷிதம்" இத்யாதி ச்லோகத்திற்படியாலே பகவத்ப்ரஸாதத்தாலே ஸாக்ஷாத்க்ருதமான பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளை யுடையராய், "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்" என்று எம்பெருமான் அருளிச்செய்த ஜ்ஞாநிகளுக்கு அக்ரேஸரராய், "பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" "ந ச ஸீதாத்வயா ஹீநா" என்று சொல்லுகிற படிகளையுடைய, இளைய பெருமாளைப்போலே ஜந்மப்ரப்ருதி எம்பெருமானையே தாரகாதிகளாகவுடையராய், அவனைப் பிரியில் தரியாத தன்மையருமாய், நிரஸ்தநிகிலஸாம்ஸாரிக ஸ்வபாவருமாய், "நதேவலோகாக்ரமணம்" இத்யாதி ச்லோகத்திற் சொல்லுகிறபடியே ,பகவத்வ்யதிரிக்த புருஷார்த்தப்ரஸ்தாவத்திலே வெருவும் ஸ்வபாவருமாய், "விஸ்ரேணுத்மநோ யோகம்" "ந ததர்ப்ப ஸமாயாந்தம்" இத்யாதியிற் சொல்லுகிற படிகளையுடைய அர்ஜுந தசரதாதிகளைப்போலே காலதத்த்வமுள்ளதனையும் எம்பெருமானை அநுபவித்தாலும் த்ருப்தி பிறவாதே மேன்மேலெனக் கடல்போலே

பெருகுகிற தம்முடைய அபிநிவேசத்தாலே கபளீக்ருத சிதசிதீச்வர தத்வத்ரயத்தையு முடையருமாய், பிராட்டிமார் பக்கலாதல் அந்த லக்ஷ்மணபரதாதிகள் பக்கலாதல் ஸ்ரீகோபிமார்பக்கலாதல் தம்முடைய இப்படிக்கு ஸர்வதா ஸாம்யம் காணவொண்ணாதபடியான ப்ரபாவத்தை யுடையருமாய் "தர்மாத்மா ஸத்ய சௌசாதி குணாகரஸ் ததா" இத்யாதி ச்லோகத்தில் ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானை ஸாதுக்களுக்கெல்லாம் உபமாநபூமியாகச் சொன்னாற்போலே எல்லாருக்கும் தம்முடைய ஓரோ வகைகளாலே உபமாநபூமியுமாய், "குணைர் தாஸ்யமுபாகத:" என்னும் படியாலே, பகவத்குணங்களுக்குத் தோற்று அடிமைகொள்ளுவதுபுகுவதும் செய்து, "அஹம் தாவத்" இத்யாதி ச்லோகத்திற்படியே பகவதைகாந்த்யஸீமையுமாய், "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்னும்படியாலே எப்பேர்ப்பட்ட அடிமையும் செய்தல்லது தரியாதபடியையுடையருமாய், தம்முடைய ஸந்நிதிமாத்ரத்தாலே எல்லாருடைய அஹங்கார மமகாரரூபமான அவித்யாக்யதமஸ்ஸைப் போக்கி ஜ்ஞாநபக்திகளைப் பிறப்பித்து அவர்களை பகவத்கைங்கர்யலக்ஷண மோக்ஷந்துக்கு நிலவராக்கும் ஸ்வபாவந்தையுடையராய்க்கொண்டு வளர்ந்தருளுகிற காலத்திலே, இவருடைய பகவத்குணாநுபவம் உள்ளடங்காமை வேதங்களிலும் வேதோபப்ரும்ஹணமான இதிஹாஸ புராணாதிகளிலு முண்டான ஸம்சயங்களை அறுக்கைக் கீடான ஸாத்குண்யத்தை யுடைத்தான திருவிருத்தம் திருவாசிரியம் திருவந்தாதி திருவாய்மொழியாகிற ப்ரபந்தங்களாய்க்கொண்டு ப்ரவ்ருத்தமாயிற்று. இப்படி "அவாவிலந்தாதிகளா லிவையாயிரமும்" என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்தார்.

இது இங்ஙனாகில், இப்ப்ரபந்தங்களுக்குப் பாட்டும் ஸங்க்யையும், பாட்டுக்கள் நாலடியாகையும், அக்ஷரங்கள் ஸமமாகையும் துடக்கமான இப்ப்ரபந்தலக்ஷணங்கள் சேரவிழுந்தபடி எங்ஙனே? என்னில்;—சோகவேகத்தாலே பிறந்த 'மாநிஷாத' இத்யாதி ச்லோகமானது 'மச்சந்தாதேவ' என்கிற ச்லோகத்தின்படியே ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே ஸர்வலக்ஷணோபேதமானாற்போலே, பகவத்ப்ரஸாதமடியாகப் பிறந்த இப்ப்ரபந்தங்களுக்கு இவற்றில் கூடாததில்லை. "இவை என்ன கோடியிலே அடைக்கப்பட்ட ப்ரபந்தங்கள? இவை பிறந்தபடி எங்ஙனே? இவற்றுக்கு மூலமென்? ஒன்றை மூலமாகச்சொன்னால் அது மூலமென்றறியும்படி எங்ஙனே? இவை ப்ரமாணமென்று அறிவது எத்தாலே? இவற்றுக்கு ப்ரதிபாத்யர் ஆர்? இப்ப்ரபந்தங்கள் கற்கைக்கு அதிகாரிகள் யார்? இவற்றுக்கு போக்தாக்கள் யார்? இவை எதுக்காகப் பண்ணப்பட்டன?" என்று அவ்யுத்பந்நர் கேட்கில்;—இவை புருஷார்த்தப்ரகாசகமான ப்ரபந்தங்களில் ப்ரதாநமான ப்ரபந்தங்கள்; பகவத்குணாநுபவ ஜநித ஹர்ஷப்ரகர்ஷபலாத்காரம் சொல்லுவிக்கப் பிறந்தன; பகவத்ப்ரஸாதலப்தமான திவ்யசக்ஷுர்மூலமாகப் பிறந்தன வென்னுமிடம் ஸ்வரவசந வ்யக்திகளாலே அறியலாம்; வேதார்த்தவித்துக்களான ஸர்வசிஷ்டஜநங்களும் பரிக்ரஹிக்கையாலும், ஸம்ஸாரத்தில் உத்வேகப்பிறந்தாருக்கு ஜ்ஞாதவ்யமான வேதார்த்தங்களை இப்ப்ரபந்தங்களிலே காண்கையாலும், இவை உத்க்ருஷ்டதமமான ப்ரமாணங்களென்று அறியலாம்; எல்லாருக்கும் பரமப்ராப்யபூதனான ச்ரிய:பதி இப்ப்ரபந்தங்களுக்கு ப்ரதிபாத்யன்; ஸம்ஸாரத்தில் ருசியற்று எம்பெருமான் திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட அடிமைகளும் செய்யவேணுமென்றிருக்குமவன் இவை கற்கைக்கு அதிகாரி; முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யரும் ச்ரிய:பதியான எம்பெருமான்தானும்

இவற்றுக்கு போக்தாக்கள்; பகவத்கைங்கர்யமாகிற நிரதிசய புருஷார்த்தம் இன்ன படிப்பட்டிருக்குமென்று அறிவிக்கைக்காகப் பிறந்த ப்ரபந்தங்கள் இவை'' என்று சிரோபாஸித ஸத்வ்ருத்தராயிருப்பார் பரிஹரித்தார்கள்.

''திஷித்தபாஷையா யிருக்கையாலும், இப்ப்ரபந்தங்களை ஸ்த்ரீசூத்ராதிகளும் அப்யஸிக்கக் காண்கையாலும், இக்கலிகாலத்திலே ஜ்ஞானத்துக்கு அடைவில்லாத சதுர்த்த வர்ணத்திலே பிறந்தாரொருவராலே நிர்மிதங்களாகையாலும், தேசாந்தரங்களிலின்றிக்கே ப்ராதேசிகங்களாகையாலும், அவைதிகர் க்ரஹிக்கையாலும், ச்ருதிஸ்ம்ருதிவிருத்தமான காமபுருஷார்த்தத்தைப் பலகால் பேசுகையாலும், ச்ருதிஸ்ம்ருதிகளில் புருஷார்த்ததயா சொல்லப்படுகிற ஐச்வர்ய கைவல்யங்களைக் காற்கடைகொள்ளுகையாலும், இப்ப்ரபந்தங்கள் ப்ரமாணமாகமாட்டா', என்று வைதிககோஷ்டியில் பழக்கமில்லாதார் சில அறிவுகேடர் ப்ரத்யவஸ்தானம் பண்ண, மாத்ஸ்யபுராணத்திலே பாஷாந்தரத்திலே பாடாநின்றுள்ள கைசிகாதிகளைத் தன் நாட்டினின்றும் போகவிட்ட ராஜாவைக் குறித்து, *ஹரிகீர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம, பாஷாகானம் ந கர்தவ்யம் தஸ்மாத் பாபம் த்வயா க்ருதம்* என்ற யமன்வசநத்தின்படியே பாஷாநிஷேதம் பகவத்விஷயமொழிய பாஹ்யவிஷயங்களிலே யாகையாலும், இங்ஙனன்றிக்கே பாஷாமாத்ராவதியாக விதிநிஷேதங்களை அங்கீகரிக்கில் ஸம்ஸ்க்ருதபாஷையான பாஹ்யசாஸ்த்ராப்யாஸங்கள் பண்ண ப்ரஸங்கிக்கையாலும், ஆழ்வார் தம்முடைய க்ருபாதிசயத்தாலே வேதத்தில் அநதிகாரிகளான ஸ்த்ரீசூத்ராதிகளும் இழவாதபடி வேதார்த்தத்தை த்ராவிட பாஷையாலே அருளிச்செய்கையாலும், ''எதிர்சூழல்புக்கு'' என்னுங் கணக்காலே அநேக ஜந்மங்கள் எம்பெருமான்தானே தொடர்ந்து விஷயீகரிக்கைக்கு ஈடான பாக்யத்தையுடையராய், நிரந்தர பகவத்கடாக்ஷபாத்ரமுமாய், தத்வஹிதங்களில் நிபுணராய், அவற்றினுடைய உபதேசத்திலும் ப்ரவ்ருத்தராய், விதுர சபர்யாதிகளில் விலக்ஷணரான ஆழ்வார் பக்கலிலே இப்ப்ரபந்தங்கள் பிறக்கையாலும், இப்பாஷை நடையாடி சிஷ்டப்ரசுரமான தேசங்களெங்கும் உண்டாய் பாஷாந்தரங்களிலே பிறந்து விலக்ஷணராயுள்ளாரும் இவற்றின் வைலக்ஷண்யத்தைக் கேட்டு 'இவற்றை அப்யஸிக்கைக்கு ஈடான இப்பாஷை நடையாடுந் தேசத்திலே பிறக்கப்பெற்றிலோமே!' என்றிருக்கையாலும், இவற்றின் நன்மையைக்கண்ட அவைதிகனுங் கூடப் பரிக்ரஹிக்கை ச்லாக்யதாஹேதுவாகையாலும், வேதநமென்றும் உபாஸநமென்றும் உபநிஷத்துத்தன்னில் சொல்லப்படுகிற பக்தியை இவற்றில் காமமாகச் சொல்லுகையாலும், ஐச்வர்யகைவல்யங்களை தூஷித்தது-அல்பாஸ்திரத்வாதி தோஷத்தாலே யாகையாலும், ப்ரதிபாத்யனான எம்பெருமானுடைய மாஹாத்ம்யத்தாலும், அவனை ஸ்பஷ்டமாக ப்ரதிபாதிக்கையாலும், பக்திக்கும் உத்பாதகங்களாகையாலும், உத்பந்நையான பக்திக்கு வர்த்தகங்களாகையாலும், ச்ரவணாதிகளில் அப்போதே நிரதிசய ப்ரீதி ஜநகங்களாகையாலும், இவற்றிற் சொல்லுகிற பொருளுக்குப் பல விடங்களிலும் வேதத்தை ஸாக்ஷியாகச் சொல்லுகையாலும், ப்ரஹ்மகாரணவாதத்தாலும், ப்ரஹ்ம ஜ்ஞாநந்மோக்ஷத்தைச் சொல்லுகையாலும், புருஷார்த்தவிஷயமான ப்ரபந்தங்களெல்லாவற்றிலும் இப்ப்ரபந்தங்களை த்ருடதரப்ரமாணங்களாக உபபாதித்து வைதிககோஷ்டிகளில் அபியுக்தரானவர்கள் பரிஹரித்தார்கள்.

பகவத்ப்ரஸாதத்தாலே பரிபூர்ணமாக அவனை அநுபவித்துப் பூர்ணரா யிருந்த ஆழ்வாருக்கு எம்பெருமானைப் பிரிகையும், பிரிவாலே நோவுபட்டுக் கூப்பிடுகையும் கூடினபடி எங்ஙனே? என்னில்;—ஓரோ குணத்தை அநுபவித்தால் அநுபூத குணங்களிலுண்டான ப்ரீதிப்ரகர்ஷம் க்ஷுத்ரவிஷயங்களில் வைராக்யத்தைப் பிறப்பித்து குணாந்தரங்களிலே ஸ்ப்ருஹையைப் பிறப்பிக்கும். அக்குணங்களில் க்ரமப்ராப்தி பற்றாதே யாதொருபோது ஆசை மிக்கது, அப்போது ஆசைப்பட்ட பொருள் கிடையாமையாலும், பகவதநுபவ விரோதியான ப்ரக்ருதி ஸம்பந்த ஸ்மரணாதிகளாலுமாக பகவத்விஷயத்தில் அநுபவித்த அம்சத்தையும் இழந்து நோவுபடாநிற்பர். பஹுகுணனான எம்பெருமான்பக்கலிலே நிரதிசய பக்திமான்களாய், தத்ஸம்ச்லேஷ விச்லேஷைக ஸுகதுக்கராய், அவனையல்லது அறியாத படியாய், பகவதநுபவஸுகமே மிக்கபோது இதர பதார்த்தங்களுமெல்லாம் தம்மைப் போலே எம்பெருமானைப்பெற்று ஸுகிக்கிறனவாக நினைத்தும், விச்லேஷமென்று ஒரு பதார்த்த முண்டென்று அறியாதே லோகயாத்ரையோடு ஒக்க மறந்தும், விச்லேஷவ்யஸநம் மிக்கால் ஸம்ச்லேஷரஸமுண்டென்றும் அறியாதே, அந்யபரமான இதரபதார்த்தங்களுமெல்லாம் தம்மைப்போலே எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுகிறனவாகக் கொண்டு அவற்றுக்குமாகத் தாம் நோவுபடாநிற்பர். இவருக்குப் ப்ரியாப்ரியங்கள் ஒருகாலும் முடியாதே பர்யாயேண உண்டாயிருக்கை யாலே சிந்தயந்தியுடையபடி நித்யமாய்ச் செல்லுமென்று சொல்லுவர்.

சேதநருக்கு ஸ்த்ர்யந்ந பாநாதிகளே தாரகபோஷக போக்யங்களாய்ச் செல்லாநிற்க, இவரை பகவத்குணைகதாரகரென்னக் கூடுமோ? என்னில்; திருவயோத்யையிலும் கோஸலஜநபதத்திலு முள்ள ஸ்தாவரஜங்கமங்களடைய ராம குணைகதாரகங்களாயிருக்கும்படியை அநுஸந்தித்து இதுவுங்கூடுமென்று கொள்வது. இப்படியிருக்கிற இவர்க்கு எம்பெருமானோடு ஸம்ச்லேஷமாவது-ப்ரத்யக்ஷஸமாநாகாரமான ஜ்ஞாநஸாக்ஷாத்காரம்; விச்லேஷமாவது-பாஹ்யஸம்ச்லேஷாபேக்ஷை பண்ணி அது பெறாமையாலே மாநஸாநுபவத்துக்கு வந்த கலக்கம். ஸர்வஜ்ஞனாய் ஸர்வநியந்தாவாய் நிரவதிகக்ருபாவானாயிருக்க எம்பெருமான் இவருடைய இவ்வநுபவத்தை உருவ நடத்தாதே விச்சேதித்ததுக்கு ப்ரயோஜநமென்? என்னில்;—திருவயோத்யையிலும் திருக்குரவையிலும் பிரிந்த பிரிவிற்போலே இவர்க்கு அநுபூதகுணங்கள் ஸாத்மிக்கைக்கும் மேன்மேலென த்ருஷ்ணை பிறக்கைக்கும். எம்பெருமான்பக்கல் பிறந்த ஆசை முதிர்ந்து நினைத்தபடி பெறுவிட்டவாறே சோக மோஹங்கள் பிறக்கும். இப்படியுள்ள கலவியாலும் பிரிவாலும் ஆழ்வாருக்கு வந்த தசை அந்யாபதேசப்பேச்சைப் பேசுவிக்கும். இப்ப்ரபந்தங்களில் ஸூக்திகள் ப்ராப்யனான எம்பெருமானுடைய ஸ்வரூப ப்ரதிபாதகங்களாயிருக்கும் சில; ப்ராப்தாவான ப்ரத்யகாத்மஸ்வரூப விஷயமாயிருக்கும் சில; ப்ராப்த்யுபாயத்தைச் சொல்லாநிற்கும் சில; பலத்தைச் சொல்லாநிற்கும் சில; ப்ராப்தி விரோதிகளைச் சொல்லாநிற்கும் சில; அவசிஷ்டமானவை இவ்வர்த்தங்களுக்கு உபபாதகங்களா யிருக்கும், இவற்றில் உத்தேச்யம் பலம்; ததர்த்தமாக மற்றுள்ள நால்அர்த்தமும் சொல்லுகிறது.

இவற்றில் ப்ரதம ப்ரபந்தமான **திருவிருத்தத்தில்** த்வதநுபவ விரோதியான ஸம்ஸாரஸம்பந்தத்தை யறுத்துத் தந்தருளவேணுமென்று எம்பெருமானை அர்த்திக்கிறார். **திருவாசிரியத்தில்** நிவ்ருத்தஸம்ஸாரர்க்கு விஷயமான எம்பெருமானைப் பரிபூர்ணமாக அநுபவித்து ப்ரீதராகிறார். **பெரிய திருவந்தாதியில்** நிரதிசயபோக்யனான எம்பெருமானை அநுபவிக்கையாலே, ததநுகுணமாக த்ருஷ்ணை பிறந்து த்ருஷ்ணாநுகுணமாக அவனைப் பேசியும் நினைத்தும் தரிக்கிறார். **திருவாய்மொழியில்** இவருடைய த்ருஷ்ணாநுகுணமாக ச்ரிய:பதியாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், தனக்குத்தகுதியான திவ்யதேஹத்தையு முடையனாய், திவ்யபூஷணபூஷிதனுமாய், சங்கசக்ராதி திவ்யாயுதனுமாய், பரமவ்யோமத்தில் ஆநந்தமயமான திவ்யாஸ்தாந ரத்நமண்டபத்திலே பிராட்டிமாரோடேகூட திவ்யஸிம்ஹாஸநத்திலே வீற்றிருந்தருளி அஸ்தாநேபயசங்கிகளான அயர்வறுமமரர்களாலே அநவரத பரிசர்யமாண சரணநளிநனாய்க்கொண்டு அங்கு அங்ஙனே செல்லாநிற்க; ஸ்வஸங்கல்பாயத்தஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகமான ஸ்வேதரஸமஸ்தத்தையும் சரீரதயா சேஷமாகவுடையனாய், அந்தராத்மதயா சேதநாசேதநங்களை அடைய வ்யாபித்து, தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாய், நாராயணாதி நாமங்களைத் தனக்கு வாசகமாகவுடையனாய், ஏவம்விதனாக உபநிஷத்ப்ரஸித்தனுமாய், இப்படி விஸஜாதீயனுமா யிருந்துவைத்து ஆச்ரிதவாத்ஸல்யத்தாலே தேவமநுஷ்யாதி ஸஜாதீயனாய் வந்து திருவவதாரம்பண்ணும் ஸ்வபாவனுமாய், தன்னுடைய திருவவதாரங்களிலும் உதவுகைக்கீடான பாக்யமில்லாதார்க்கும் இழக்கவேண்டாதபடி ஸர்வாபராத ஸஹனாய், பத்ரபுஷ்பாதிகளாலே ஸ்வாராதனாய்க்கொண்டு ஆச்ரிதர்க்கு அத்யந்த பராதீநனாய், அவர்களுடைய இச்சாநுகுணமான போஜநசயநாதிகளையுடையனாய், ஸமஸ்த கல்யாணகுணபரிபூர்ணனான தானே ஆச்ரித ஸுலபத்வார்த்தமாகக் கோயில்களிலே வந்து நின்றருளியும், இப்படியுள்ள ஸர்வேச்வரத்வத்துக்கும் ஆச்ரிதாநுக்ரஹத்துக்கும் ஏகாந்தமானபடிகளால் பரிபூர்ணனான எம்பெருமான், தன்னை நிர்ஹேதுகமாகக் காட்டியருளக் கண்டு அநுபவித்துத் தம்முடைய ப்ரக்ருதிஸம்பந்தமாகிற ப்ரதிபந்தகமும் அற்று எம்பெருமானைப்பெற்று முடிக்கிறார். இனிச்சொல்லவேண்டுவன அவ்வவ திருவாய்மொழிகள்தோறும் சொல்லக் கண்டுகொள்வது.

முதல் திருவாய்மொழியிற் சொல்லிற்றாயிற்று-நாநாரத்நபூர்ணமாய் அபரிச்சேத்யமான கடலை முந்துறத் திரளக்கண்டாற்போலே ஸ்வரூபரூபகுணவிபூதிகளால் பரிபூர்ணனாய், எல்லாப்படியாலும் எல்லாரிலும் மேற்பட்டு ஸர்வேச்வரனாய் ச்ரிய:பதியாக அபௌருஷேயமாய்க்கொண்டு ஸூத்ருடப்ரமாணச்ருதிகளாலே ப்ரதிபாதிக்கப்பட்ட எம்பெருமானை, பாஹ்ய குத்ருஷ்டிகளால் அவிசால்யமாம்படி அவன் ப்ரஸாதத்தாலே ஸாக்ஷாத்கரித்து அநுபவித்து, அநுபவஜநிதப்ரீதி உள்ளடங்காமை, அநுபவித்தபடியே ஸவிபூதிகனான எம்பெருமானைப்பேசி, ஏவம்விதனானவன் திருவடிகளிலே அடிமைசெய்து உஜ்ஜீவி யென்று தந்திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்கிறார். கடலைத் திரளக்கண்டானொருவன் அதில் திரைகளையும் மற்றும் அங்குண்டான ரத்நாதிகளையும் தனித்தனியே காணுமாபோலே, முதல்திருவாய்மொழியில் திரள அநுபவிக்கப்பட்ட எம்பெருமானுடைய ஓரோவகைகளிலே

# எனது இரவு நினைவுகள்

## ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமியைப்பற்றிய சிந்தனைகள்

இது நான் எழுதத் தொடங்குவது 13—2—74 புதன்கிழமை ஸ்வாதீநக்ஷத்ரத் தன்று. நேற்றுமாலை காஞ்சீபுரியில் ஸ்ரீ காதிஸ்வாமி திருமாளிகையில் சதாப்தீ மஹோத்ஸவத் தொடக்கமாயிற்று. அதுபற்றிய வைபவங்களைப் பிறகு தெரிவிக்கி றேன். முந்துற முன்னம் ஸ்ரீ காதிஸ்வாமிக்கும் அடியேனுக்கும் விளைந்த தொடர்பைப் பூர்வபீடிகையுடன் சிறிது தெரிவிக்கிறேன். நம்மாழ்வார் திருவாய் மொழியில் 'என்னைப்பெற்றவத் தாயாய்த் தந்தையாய் அறியாதனவறிவித்த அத்தா நீ செய்தன அடியேனறியேனே' என்கிற பாசுரம் அருளிச் செய்கிறார். இது ஒரு விலக்ஷணமான க்ருதஜ்ஞதாநுஸந்தாநம். இதைப்போல் அடியேன் பண்ணவேண்டு மாகில் (வைகுண்டவாஸியான) ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமி பக்கலிலேயே இதை நான் பண்ணத்தகும். என்னுடைய பத்தாவது பிராயம் முதல் ஸ்ரீ காதிஸ்வாமி யின் திருமேனி ஸேவை எனக்குக் கிடைத்திருக்கிறது. ஆனால் பதினைன்காவது பிராயத்திற்கு பிறகுதான் அந்தஸ்வாமியினுடைய திருவடி ஸேவாபாக்யம் கிடைத் தது. என்னுடைய பத்தாவதுவயது முதல் பதினான்காம் வயது வரையில் ஸ்ரீ காதி ஸ்வாமி அண்ணா ஸன்னிதியில் ஸ்தாபித்திருந்த வேதாந்த வைஜயந்தி என்னும் பாடசாலையில் கல்விப் பயிற்சி பெரும்பாலுமாயிற்று. அப்போது ஸ்ரீ காதிஸ்வாமி அடிக்கடி சிஷ்ய ஸஞ்சாரமாக வடநாடுகளில் எழுந்தருள நேரும். காஞ்சியில் எழுந்தருளியிருந்த நாட்களில் அண்ணாஸன்னிதி பாடசாலைக்குத் தவறாது எழுந் தருளி பாடங்கள் ஸாதித்தருள்வர். அக்காலத்தில் ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியில் வாசித்த பாடங்களும் நினைவிலிருக்கின்றன. அதுபற்றி பின்!

## இடையில் திருத்தகப்பனாரைப் பற்றி சிறிது ப்ரஸ்தாபிக்கிறேன்

அடியேனுடைய திருத்தகப்பனார் சிறந்த கல்விக்கடலாகவும் வேதாந்த வித்யாநிதியாகவும் விளங்கியவர். அவரிடத்துக் கல்விகளைப் பயின்று தேறிய பண்டிதர்கள் பலர். அக்காலத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதி வீதியிலுள்ள வானமாமலை மடத்தில் நடந்துவந்த ஸம்ஸ்க்ருத பாடசாலையில் திருத்தந்தையார் ஸாஹித்யத்திற்கும் திவ்யப்ரபந்தத்திற்கும் உபாத்யாயராக இருந்து வந்தார். திருத் தகப்பனார் சிறு பிராயத்திலிருந்தே "ஸ்காலித்யே சாஸிதாரம்" என்கிற ஆசார்ய லக்ஷ ணத்தைக் கைக்கொண்டு, வயதில் பெரியவர்களுக்குங்கூட ஆசாரத்தை நிர்தா க்ஷிண்யமாக சிக்ஷிக்குமவராயிருந்தபடியால், சிறியார் பெரியாரென்கிறவாசியில் லாமல் யாவருமே அவரிடத்தில் அஞ்சி நடுங்கிக்கொண்டிருந்த நிலையை நேரில் அநுபவித்திருக்கின்றேன். திருத்தகப்பனாருடைய ஆழ்ந்த வ்யுத்பத்தியும் ஞாபக சக்தியும் அப்ரதிமமானது, அபரிமிதமானது. பாடஞ்சொல்லுகிற ஸமயம் போக இதரஸமயங்களிலுங்கூட அநேக க்ரந்த ஸம்பந்திகளான பல விஷயங்களையுரைத் துக்கொண்டேயிருப்பர். அந்த கால விசேஷங்களை நினைக்கும்போதெல்லாம் 'தே ஹி நோ திவஸா கதா:'' என்கிற பவபூதி ச்லோகம் நினைவுக்கு வந்து கண்ணீர் பெருகும். இது நிற்க, முந்தின க்ரோதிவருஷ மாசி மாதத்திலிருந்து திருத்தகப்பனாரு

டைய திருமேனியில் கிலேசம் அதிகரிக்கவாரம்பித்தது. ஆனாலும் அவருடைய நித்யகர்மாநுஷ்டானங்களுக்கு ஸ்வல்பலோபமும் நேர்ந்ததில்லை. அவர் த்வாதசோர்த்வ புண்ட்ரமணியாமல் ஒருநாளுமிருந்ததில்லை. அவருடைய திருமேனி ஸ்வர்ணச்சாயையை வென்றிருக்கும். அவர் திருப்பரிவட்டம் தரித்துமழகும் பன்னிருநாமம் அணியுமழகும் நிகரற்றது என்னலாமத்தனை. அவர் திருவீதியில் நடந்தெழுந்தருளும் போது கண்டால் ஸ்வர்ணவிக்ரஹமொன்று கைகால் முளைத்துச் செல்லுகின்றதென்பர். மாசிமாத முடிவில் திருமாளிகையிலுங்கூட ஸஞ்சரிக்க முடியாதபடி அசக்தி அதிகரித்தது. திருத்தகப்பனார் பரமபதிப்பதற்கு முன்னே ஐந்துநாள் அடியோடு ஞாபகமே யில்லாமலிருந்தார். திருநாட்டுக்கெழுந்தருளுகிறவன்று காலை ஆறு மணி முதல் 12-மணி வரைக்கும் நல்ல ஞாபகமும் படபடவென்று பேசுகிற சக்தியும் பெற்று அடியேனுக்கு சரமஸந்தேசங்கள் அநுக்ரஹிக்க ஆரம்பித்தார். அடியேனுக்குமட்டுமன்று; அங்குக் குழுமியிருந்த அனைவர்க்கும் ''யதாதிகாரம் நெறியெல்லா மெடுத்துரைக்கிறார்'' என்று ஆசார்ய ஹ்ருதயத்தில் ஸாதிக்கிறபடி அவரவர்களுக்குத் தக்கவாறு ஆச்சரியமான ஸந்தேசங்களை ஸாதித்தருளி அடுத்த க்ஷணத்திலேயே ப்ரஜ்ஞாபங்கமடைந்தார். இரண்டு நாழிகைக்குள் இவ்விபூதியை விட்டகன்றார். அந்த ஸந்நிவேசம் பலர்க்கும் ஆச்சரியமாயிருந்தது.

அக்காலத்தில் சிஷ்ய ஸஞ்சாரமாக வடநாட்டிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் காதிஸ்வாமி யாத்திரையை முடித்துக்கொண்டு காஞ்சிக்கு வந்து சேர நாலாறு மாதமாயிற்று. நான் ஸ்ரீமத் காதிஸ்வாமி திருமாளிகைக்கு ஸ்வீகார குமாரன் போல் சென்று சேர்ந்து அங்கேயே அசநசயநாதிகளை வைத்துக்கொண்டு அப்போது அண்ணா ஸன்னிதியில் நடந்து கொண்டிருந்த வேதாந்த வைஜயந்தீ பாடசாலையிலும், தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் நடந்து கொண்டிருந்த சடகோபநிலய பாடசாலையிலும் சாஸ்த்ரபாடங்கள் வாசித்துக் கொண்டிருந்தேன். அப்போது ஸ்ரீகாதிஸ்வாமி சிஷ்யப்ரார்த்தனையால் ஹைதராபாத்—ஸீதாராம் பாக் எழுந்தருள வேண்டியதாயிற்று. அப்போது அடியேனும் ''நீத: ப்ரீதி புரஸ்க்ருத:'' என்னுங்கணக்கிலே உடன் விடை கொள்ள நேர்ந்து ஏறக்குறைய ஒரு ஸம்வத்ஸரம் அங்கே வஸிக்க நேர்ந்தது. ஸீதாராம்பாக் என்னுமிடம் மிகப் பெரிய தோட்டம். ''மன்னு தண் பொழிலும் வாவியும் மதிளும் மாடமாளிகையும் மண்டபமும்'' என்னும்படி மிகவும் ரமணீயமான ஸந்நிவேசம். ஸ்ரீ காஞ்சியில் தேவப்பெருமாள் ஸந்நிதியில் கைங்கரியங்களும் உத்ஸவங்களும் மிகவிலக்ஷணமாக நடந்து வந்த காலம். ஒருவருஷகாலம் நம் தேவப்பெருமாளையும் மறந்து இருக்கப் பண்ணிற்றென்றால் பேசத்தானாவ துண்டோ? அப்போதைய நிலைமைகளை அடியேன் அடிக்கடி நினைப்பதுண்டு. அப்போது ஸ்ரீகாதிஸ்வாமிக்கு நிர்ப்பந்தமான ஒரு காரியமும் கிடையாது. இரவு ஒன்பது மணிக்கு மேல்தான் நகரத்திலிருந்து சிஷ்யர்கள் வந்து வார்த்தையாடுவார்கள். பகல் முழுவதும் இரண்டொரு மணி காலந்தவிர மற்றபோதெல்லாம் ஸ்வாமியை விட்டுப் பிரியாமே வாழ நேர்ந்த காலம் அது. சாஸ்த்ரபாடம் வாசிப்பதோடுகூட ஸ்வரூப க்ரந்தங்களையும் ஸேவிக்கத் தொடங்கும்படி நியமனமாயிற்று. திருமந்த்ரார்த்த காலக்ஷேபம் அப்போது அவ்விடத்

தில்தான் ப்ராப்தமாயிற்று. தாத்பர்ய சந்த்ரிகையோடு கீதாபாஷ்ய காலக்ஷேபமும் அங்கே தான் ப்ராப்தமாயிற்று. அவ்விடத்தில் இதரர்களோடு பேசினால் ஹிந்தியிலும் தெலுங்கிலும் பேசவேண்டியிருந்தபடியாலே அவ்விரண்டு பாஷைகளிலும் பரிசயம் ஏற்பட்டது. அந்த ஸமயம் காதிஸ்வாமியோடுகூட அவ்விடம் விடை கொள்ள நேர்ந்ததானது அடியேனுடைய பலவகை க்ஷேமங்களுக்கு மூல காரணமாயிற்று.

இவ்விஷயத்தைத் தற்காலம் இவ்வளவில் நிறுத்தி ஸ்ரீகாதிஸ்வாமி நியமனத்தால் ப்ராப்தமான ரைவதக கிரியாத்திரையைப்பற்றி நினைவுக்கு வந்தவற்றை எழுதத் தொடங்குகின்றேன்.

# ரைவதககிரி யாத்திரை

அடியேன் சிசுபாலவத மஹா காவ்யமென்கிற மாக காவியம் வாசிக்கும் போது அதில் நான்காவது ஸர்க்கத்தில் ரைவதக கிரி வர்ணநம் வெகு அற்புதமாக நிகழ்வதை மகிழ்ந்து வாசித்துக்கொண்டிருந்தேன்; அதில் பத்தாவது சுலோகம்

முதே முராரே ரமரைஸ் ஸுமேரோ ராநீய யஸ்யோபசிதஸ்ய ச்ருங்கை:,
பவந்தி நோத்தாமகிராம் கவீநாம் உச்ச்ராய ஸௌந்தர்யகுணா ம்ருஷோத்யா:.

என்பது. கண்ணபிரானுடைய ஸந்தோஷத்தின் பொருட்டுத் தேவர்களால் மேரு மலையின் சிகரங்களைக் கொணர்ந்து அபிவிருத்தி செய்யப்பட்டதான ரைவதக மலையின் உயர்த்தியையும் அழகையும் வருணிக்கிற கவிவாக்குக்கள் பொய்யுரையாகமாட்டா வென்பது இந்தச் சுலோகத்தின் கருத்து. கவிகள் எதைப் பேசினாலும் அதிசயோக்தி யலங்கார த்தில் வைத்துப் பேசுவது இயல்பாதலால் இல்லாததை ஏறிட்டுச் சொல்லுகிறார்களென்னுங் காரணத்தினால், பொய் சொல்லுகிறவர்களென்கிற அபக்க்யாதி பெரும்பாலும் கவிகளுக்கெல்லா முண்டு; ஆனால் ரைவதக பர்வத விஷயத்தில் மட்டும் அந்த அபக்க்யாதிக்கு அவகாசமே கிடையாது; கவிகள் ஸத்யவாதிகளே யொழிய அஸத்யவாதிகளல்லர் என்று இந்த ச்லோகத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தின் வியாக்கியானத்தில் மல்லிநாதர் "மேருச்ருங்காஸம்பந்தேபி ஸம்பந்தகதநாத் அதிசயோக்தி:" என்றெழுதி முடித்திருக்கிறார். ஸ்வபாவோக்தி யலங்காரமென்று எழுதாமல் அதிசயோக்தி யலங்காரமென்றே எழுதிவைத்தார். அதிசயோக்திக்கு ஆஸ்பதமில்லை என்று மூலத்தில் முக்த கண்டமாகச் சொல்லப்பட்டிருக்க, அவ்விடத்திலேயே அதிசயோக்தியென்று எழுதிவைப்பது பொருந்துமோவென்று வித்யார்த்தி தசையில் விசாரம் செய்துகொண்டிருந்தேன். மலையின் உயர்த்தியைப்பற்றியும் அழகு முதலிய குணங்களைப்பற்றியும் அதிசயோக்திக்கு இடமில்லை யென்பது மூலகாரருடைய அபிப்ராயம். மேரு பர்வதத்திலிருந்து சிகரங்களைக் கொணர்ந்து அபிவிருத்தி செய்ததாகச் சொல்லப்பட்ட விஷயம் இல்லாததைச் சொல்லுவதே யாதலால் இந்த அம்சத்தில் அதிசயோக்தி யென்றது பொருந்தும் என்று பண்டிதர்கள் ஸமாதானம் சொல்லுவார்கள். அது நிற்க. அந்த ரைவதக மலையைப் பற்றி விசேஷ வர்ணனைகளை அற்புதமாக வாசித்தபோது, இந்த மலை வாஸ்தவமாக

பூலோகத்திலுள்ளதானால் அங்கே சென்று இதை அவசியம் நாம் கண்டு களிக்க வேண்டுமென்று ஆசை கிளர்ந்தது. மாககாவியம் வாசித்து முடித்தபிறகுங்கூட நெடுநாள்வரையில் இந்த மனோரதம் நெஞ்சில் ஒரு பக்கத்தில் அபரிமிதமாக இருந்துகொண்டே யிருந்தது.

ரைவதக பர்வதமென்பது குஜராத் மண்டலத்தில் [குர்ஜரதேசத்தில்] ஜூநாகட் என்கிற ஸ்டேஷனுக்கருகில் உள்ளது. ப்ரபாஸ க்ஷேத்திரம் போகிற வழியிலுள்ளதென்று கொள்க. அந்த தேசத்தார்களால் கிர்நார் என்று வழங்கப் படுகிற அந்த மலையின்மேல் வெகுதூரத்திற்கப்பால் ஒரு ஸ்ரீவைஷ்ணவ மந்திர முள்ளது. அதற்கு பத்நார்சட்டி யென்று பெயர். அவ்விடத்தில் ஒரு ஸம்ப்ரோக்ஷணம் செய்ய ப்ராப்தமாயிற்று. அஸ்மதாசார்யரான ஸ்ரீகாதிஸ்வாமியின் திருவடி ஸம்பந்திகள் அந்த ஸ்தானத்திற்கு அத்யக்ஷர்களாதலால் அவர்கள் ஸ்ரீஸ்வாமியை அவ்விடமெழுந்தருள ப்ரார்த்தித்திருந்தார்கள். ஸ்வாமி அப்போது மார்வாட ப்ராந்தத்தில் பெரிய ஜைத்ரயாத்ரை செய்து கொண்டிருந்தபடியால் அங்கே யெழுந்தருள ஸௌகரியப்படாமல் அடியேனுக்கு ஸ்ரீமுக மநுக்ரஹித் தருளினர்—'தேவப்பெருமாள் ஸந்நிதி அர்ச்சகருடனும் நாலைந்து வைதிகஸ்வாமி களுடனும் அங்கே நீ சென்று அந்த ஸம்ப்ரோக்ஷணத்தைப் பூர்த்திசெய்வித்து வருவது' என்று நியமித்தருளியிருந்தார். தேவப்பெருமாள் ஸந்நிதியில் உயர்ந்த அர்ச்சகராக இருந்த ஸ்ரீநிவாஸபட்டரையும் நமது பாடசாலையில் உபயவேத நிர்வாஹகர்களா யிருப்பவர்களையும் இரண்டொரு பரிசாரகர்களையும் அழைத்துக் கொண்டு அவ்விடம் செல்ல நேர்ந்தது. பாம்பே, அஹமதாபாத், ராஜ்கோட், ஜைடல்ஸர் முதலான விடங்களைக் கடந்து வெகுதூரத்திற்கப்பால் போகவேண்டிய தாயிற்று. ஸ்ரீகாதிஸ்வாமி அடியோங்களுடைய வருகையைப்பற்றி முன்னடியே ஆங்காங்குத் தெரிவித்தருளி யிருந்தபடியால் எங்கும் விசேஷமாக உபசரிக்கப் பெற்று (கிர்நார் என்கிற) ரைவதக பர்வதத்தின் அடிவாரம் சென்று சேர்ந்தோம். மாலை நான்கு மணிக்கு மலையேற ஆரம்பித்தோம். மலைப்படிகளின் அழகு வசாம கோசரம். மேடுபள்ள மில்லாமல் ஸமரீதியில் அகலமான படிகள் பல்லாயிரக் கணக்கிலுள்ளன. அப்போது வயது முப்பதுக்கு ஸந்நிஹிதமாகையால் சிரமமென் பது அடியோடு தோன்றாமல் வெகு உத்ஸாஹமாக நடந்து செல்லுகிறபடி. ஆறு மணிக்கு சந்திரோதயமாக ஆச்சரியமான நிலா ஒளிர்கின்றது. போகப்போக வழி மாளவேயில்லை. இரவு பதினொரு மணியாகியும் குறிப்பிட்ட ஸ்தலம் வரவில்லை. ஏகாகாரமாக ஏழு மணிகாலம் ஏற்றமாகவே நடந்தபடியால் சிரமம் தோன்றத் தொடங்கியது. இடையில் இளைப்பாற முடியாதபடி அன்றிரவே அந்த பத்நார்சட்டி ஸ்தானம் சேரவேண்டிய அவசியமிருந்தது. வெகு சிரமத்தோடு சென்றுகொண் டிருக்கையில் மிகப் பெரிய கோவிலும் ப்ராகார கோபுர மண்டபாதிகளும் தென்பட்டன. அவற்றைக் கண்டவுடனே "மந்யே ப்ராப்தாஸ் ஸ்ம தம் தேசம்" என்றாற்போலே நினைத்து ஆனந்தமாக அந்தக் கோவில் வாசலுக்குப் போனதும் "இதுவொரு ஜைநமந்திரம்; இதுவன்று ப்ராப்யஸ்தலம்; இன்னும் இரண்டு மூன்று மணிகாலம் நடந்து சென்றே அந்த ஸ்தானம் சேரவேணும்" என்றார்கள். அச்சொல் செவிப்பட்டவுடனே அசக்தி அதிகரிக்கத் தொடங்கிற்று; கால் விழுந்

திட்டது. ஆனாலும் சென்று சேர்ந்தாகவேண்டும்; ஸுந்தரபாஹுஸ்தவத்தை யநுஸந்தித்துக்கொண்டே நடந்துசெல்ல வாரம்பித்தோம். அபர ராத்ரியில் குறிப்பிட்டவிடத்தை யடையலானோம்.

அவ்விடம் ஏகாந்த ப்ரதேசமாய் அதிரமணீய ஸ்தலமாயிருந்தது. நீர்வாய்ப் பும் நிழல்வாய்ப்பும் வருணிக்க முடியாததே. அங்கே வடதேசத்துப் பண்டிதர்கள் இருபது முப்பதுபேர்கள் இதம்பரமாக வந்திருந்தார்கள். மூன்றுநாள் அங்கே தங்கியிருக்க நேர்ந்தது. அப்போதைய ஆனந்தாநுபவம் ஐம்பது வருஷமானும் என் து இரவு நினைவுகளில் அடிக்கடி வருவதுண்டு. அடிக்கடி இங்கு வரவேணுமென்று அப்போது உத்கண்டை யுண்டாயிற்று. ஆனாலும் மறுமுறை அங்குச் செல்ல நேர்படவில்லை. அது நிற்க. அங்கிருந்து திருப்புகையில் ப்ரபாஸ க்ஷேத்திரம் ஸேவிக்கவும், கூட வந்தவர்களின் திருப்திக்காக வடநாட்டிலுள்ள ஸகல க்ஷேத்ர தீர்த்தங்களையும் ஸேவிக்கவும் குதூஹலமுண்டாயிற்று. ப்ரபாஸ க்ஷேத்திரத்திற்குப் போகும் வழியில் குராஸா என்பது ஒரு ஸ்ரீ வைஷ்ணவஸ்தான விசேஷம். 'லுஸாலா' என்னும் ஸ்டேஷனிலிருந்து இரண்டொருமைல் தூரத்தி லுள்ளது அது. அங்கிருந்து ஒரு உத்தராதி ஸந்ந்யாஸி ரைவதக பர்வதத்திற்கு வந்திருந்தவர் குராஸாவுக்கு அவசியம் வந்து போகவேணுமென்று அழைத்ததனால் அவ்விடம் போக நேர்ந்தது. அவ்விடத்திய ஒரு ஆனந்தச் செய்தியை மேலே எழுதுகிறேன்.

அவ்விடத்தில் த்ரிதண்டி ரகுநாதஸ்வாமி என்பவர் மடாதிபதியாக இருந்த ஸமயம். அவர் இளமையில் ஸ்மார்த்தராக இருந்தவர். ஒரு ஸமயம் இவர் ப்ருந்தா வனம் போனபோது அங்கே கீர்த்திமூர்த்தியான கோவர்த்தனம் (ஆத்ய) ரங்கா சார்ய ஸ்வாமியின் பகவத் விஷய ப்ரவசந கோஷ்டியில் யாத்ருச்சிகமாக ஒருவேளை அந்வயித்திருந்து அன்றே அந்த ஸ்வாமியின் திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தரானார். அந்த ஸ்வாமி முமுக்ஷுப்படி ஸ்ரீவசந பூஷணம் முதலான ஏழெட்டு ரஹஸ்யங்களை வடதேசத்தார்க்கு உபயோகப்படும்படி ஸம்ஸ்க்ருதத்திலும் ஹிந்தியிலும் வசனரூபமாக அநுவாதம் செய்தருளி ஸ்வசிஷ்யர்கள் பலர்க்கு உபதேசித்துக் கொண்டிருந்தபடியால் இந்த ரகுநாதபண்டிதரும் அந்த உபதேசங்களைப் பெற்று, ஸ்வயம் சிறந்த வித்வானாகையாலே உத்தீர்ணாதி காரியாகவு மிருந்தார். கோவர்த்தநம் ஸ்வாமி திருநாட்டுக் கெழுந்தருளினபிறகு இவர் உத்தமாச்ரம ஸ்வீகாரம் செய்துகொண்டு குராஸாவில் ஸ்தானபதியாக அமர்ந்தார். நான் குராஸாவுக்குப் போயிருந்த ஸமயம் இவர் பக்ஷவாதத்தினால் சிரமப்பட்டுக்கொண்டு படுக்கையாகவே யிருந்தார். மஹாதனிகராகையாலே 25 ரூ. 35 ரூ. 50 ரூ. 60 ரூ. இப்படியாகப் பணத்தை வைத்துப் பல முடிப்புகள் கட்டித் தலையணையின்கீழும் மெத்தையின்கீழும் மறைத்து வைத்துக்கொண்டிருந்து ஸத்பாத்ரங்களில் விநியோகித்து வருவர். சிறிதும் எழுந்திருக்க முடியாதபடி சயனமாகவே யிருந்துவருகிறார்.

அவ்விடம் நான் வந்திருப்பதையறிந்து அருகே வரவழைத்து ஒரு நாற்காலி யில் என்னை உட்காரச்செய்து குசலப்ரச்னங்கள் பண்ணிப் பிறகு தம்முடைய பூர்வ

வ்ருத்தங்களை யெல்லாம் சொல்லி, ரஹஸ்ய வாக்யங்களில் கடினமான விடங்களை யெடுத்துக் கேள்வி கேட்பர்; விசதமாக பதில் சொன்னவாறே படுக்கையில் மறைத்து வைத்திருக்கும் பண முடிப்புகளில் ஒன்றையெடுத்து ஆனந்தக்கண்ணீர் பெருக்கிக்கொண்டே கொடுப்பர்; மறுபடியும் ஒரு கேள்விகேட்பர்; பதில் பெற்ற வாறே மற்றொரு பணமுடிப்பையெடுத்துத் தருவர். இப்படியாக அவர் தாம் சயனத்தில் சேமித்து வைத்திருந்த பண முடிப்புகளையெல்லாம் கொடுத்தாய் விட்டது. ப்ரபாஸதீர்த்தம் சென்று ஸேவித்து விட்டு மறுபடியும் இவ்விடம் வந்தே போகவேணுமென்று நிர்ப்பந்தித்தார். அப்படியேயென்று சொல்லிப் புறப்பட்டுப்போய் ப்ரபாஸதீர்த்தத்தில் இரண்டுநாள் இருந்து விட்டுத் திரும்பி வருகையில் அந்த மடாதிபதி மஹந்த் ஆசார்யன் திருவடி சேர்ந்து விட்டதாக ஸ்டேஷனிலேயே தெரியவந்து திரும்பி விட்டோம். ஸம்பிரதாயத்தில் அந்த மடாதிபதிக்கு இருந்த தெளிந்த ஞானம் மிகமிக வியக்கத்தக்கதாயிருந்தது. த்ராவிட பாஷாகந்தமும் தெரியாதவர்களுக்கு த்ராவிட வேதாந்த ஸம்பிரதாயார்த் தங்களை ஸ்ரீ கோவர்த்தநம் ஸ்வாமி தெளிய வுணர்த்தியிருந்த வைகரி விலக்ஷண பகவத் ஸங்கல்பத்தினாலமைந்தது என்றே சொல்லத்தக்கது. கோவர்த்தநம் ஸ்வாமி திருவடிகளில் ஸாக்ஷாத்தாக ஆச்ரயித்துக் காலக்ஷேபம் செய்தவர்கள் நூற்றுக்கணக்கான பண்டிதர்களென்று கேள்வி. அன்னவர்களில் ஏழெட்டு பண்டிதர்களோடு நெருங்கி ஸம்பாஷிக்க எனக்கு நேர்ந்ததுண்டு. கருடத்வஜாசாரி யென்கிற ஒரு ப்ரஹ்மசாரி தொண்ணூறு வயதுள்ளவர் அந்த யாத்திரையில் ஓரிடத்தில் ஸ்நேஹமானார். அவர்க்கு, பகவத் விஷயத்திலும் ரஹஸ்ய க்ரந்தங் களிலுமிருந்த பாண்டித்யம் தென்னாட்டில் ஒருவர்க்கு மிருந்ததில்லையென்று திட மாகச் சொல்லலாம். உத்தராதிகளெனப்படுகிற வடதேசத்தார் ஸந்தியாவந்தனம் செய்வதில்லை, மாதாபித்ருச்ராத்தங்களையும் பண்ணுவதில்லை என்று நம் தேசத் தவர்கள் பழித்துக் கொண்டிருப்பர்கள். அவர்களில் பலர் ஜந்மஸித்தமான ஆசார்யபக்தி பாகவதபக்தி முதலியவற்றால் ஸித்தி பெற்றிருக்கிறவிதம் நிகரற்றது.

குராஸாவிலிருந்து த்வாரகைக்குச் சென்று ஸேவித்து வருவது எளிதேயாயி னும் அந்த ஸமயம் எமக்கு த்வாரகா யாத்திரை ப்ராப்தமாகவில்லை. த்வார்கா க்ஷேத்திரம் இப்போது அடியோடு கிடையாதென்று சிலரும், அது கடலில் மூழ்கிப் போய்விட்டதென்று சிலரும் பொய்யாகச் சொல்லிக்கொண்டிருந்ததை மெய் யென்று நம்பியதனால் அப்போது அவ்விடம் போகாமலே திரும்பினோம். பிறகு எட்டு பர்யாயம த்வாரகை சென்று ஸேவித்துவர ப்ராப்தமாயிற்று. த்வாரகை கிடையாதென்றோ கடலில் மூழ்கிவிட்டதென்றோ சொல்லுவது மிகவும் தவறு. எளிதாகச்சென்று ஸேவிக்கக் கூடியதாகவே இத்தலம் விளங்குகின்றது. கோமதீ த்வாரகை யென்றும், பேடீத்வாரகை யென்றும், டாகோர் த்வாரகை யென்றும், ஸுதாமாபுரி த்வாரகையென்றும், ஸ்ரீநாத த்வாரகையென்றும் ஐந்து த்வாரகை கள் சொல்லுகிறார்கள். இவ்வைந்து த்வார்கைகளையும் அநாயாஸமாகவும் ஆச்சரிய மாகவும் ஸேவிப்பதற்கு ஸௌகரியம் வெகு நன்றாகவுண்டு. இவற்றுள் முதலதான கோமதீ த்வாரகை யென்னுமிடமே முக்கியமான த்வாரகையாகும். "சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவராபதிக்கு என்னை யுய்த்திடுமின்" என்று

ஆண்டாளும் "மதிள்துவராபதியும்" என்று பெரியாழ்வாரும் மங்களாசாஸனம் செய்தருளிய தலம் கோமதீ த்வாரகையென்பதேயாம். ஸன்னிதியின் பரிஸரத்தில் கோமதீநதி கடலோடு ஸங்கமமாகிப் பெருகுவதனால் இந்த க்ஷேத்திரம் கோமதீ த்வாரகையென்றே வழங்கப்பட்டு வருகிறது. அங்கு ஸன்னிதியின் ஸந்நிவேசம் வெகு அற்புதமானது. காணக் கண்ணாயிரம் வேணும். ஸாக்ஷாத் ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மா எழுந்தருளியிருந்த தலம் இதுவேயென்று மனம் தேறும்படியான ஸந்நிவேசம் அமைந்துளது. இவ்விடத்தில் ரைல்ஸ்டேஷனுக்கும் பெருமாள் ஸந்நிதிக்கும் இடையில் 'தோதாத்ரிமட்டம்' என்று ப்ரஸித்தமான ஒரு பெரிய தோட்டமிருக்கிறது. அங்கே தேசாந்தரி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு வாஸயோக்யமான விடுதிகள் வெகு ரமணீயங்களாக இருக்கின்றன. நல்ல தீர்த்தம் கிடைப்பதொன்றே இவ்விடத்தில் அரிது. இத்தலத்தைவிட டாகோர் த்வாரகையும் ஸ்ரீநாதத்வாரகையும் ஸகலவித ஸௌகர்யங்களும் நன்கு பொருந்திய ஸ்தல விசேஷங்கள். அவ்விடங்களிலேயே நித்யவாஸம் செய்யவும் குதூஹலமுண்டாகும். இந்த சிந்தனை அடிக்கடி வரும்.

அடியேனுக்கு ஸ்ரீபதரிகாச்ரம பர்யந்தமான வடநாட்டு யாத்திரை பலமுறை கிடைத்திருக்கிறதென்று முன்னமே விஜ்ஞாபித்திருக்கிறேன். ஸாளக்ராம க்ஷேத்ர யாத்திரை ஒரு பர்யாயங்கூட நேர்ந்ததில்லை. ஆனால் சென்று ஸேவிக்க வேணுமென்கிற குதூஹலம் மிகமிகவுண்டு. ஸாளக்ராமம் போகிற வழியில் காட்மண்டு என்பதொரு ஸ்தலமுள்ளது. அவ்விடத்திலே வஸித்த ஒரு மஹந்து ஸாளக்ராமம் வந்து ஸேவிக்க வேணுமென்று தமது ஒவ்வொரு கடிதத்திலும் எழுதிக்கொண்டிருந்தார். இது நாற்பது வருடங்களுக்கு முற்பட்ட செய்தியைத் தெரிவிக்கிறபடி. அந்த ஸமயத்தில் பல மாதங்கள் அவர்க்கு நான் பதில் எழுதாமலேயிருந்து விட்டேன். அதனால் அவர் மிகவும் பரிதபித்து முன்னாடி தெரிவிப்பதும் செய்யாமலே நேராகக் காஞ்சீபுரம் வந்தார். அன்று நான் சென்னையில் உபந்யாஸத்திற்காகச் சென்றிருந்தபடியால் அதைத் தெரிந்துகொண்டு உடனே புறப்பட்டு சென்னை வந்து உபந்யாஸ ஸபைக்கும் வந்து சேர்ந்து ஒருபுறமாக உட்கார்ந்துகொண்டார். அவரை நான் முன்பு பார்த்ததில்லையாதலால் அவரை இன்னாரென்று தெரிந்துகொள்ளாதிருந்தேன். உபந்யாஸ முடிவில் அவர் எழுந்து அருகே வந்து ஸ்ரீ ஸாளக்ராமத் திருமூர்த்திகள் நிரம்பியிருந்த வொரு சிறு பெட்டியைக் கையிலே கொடுத்து நமஸ்கரித்து நின்றார். நீர் யார்? எவ்விடம்? என்று ஹிந்தியில் விசாரிக்கையில், அவருக்கு நான் எழுதியிருந்த கடிதங்களை ஒன்றுவிடாமல் அவர் என் கையில் கொடுத்து ஒன்றும் பேசாமலே நின்றார். உடனே அவரை நான் இன்னாரென்று தெரிந்துகொண்டு 'திடீரென்று இவ்விடம் வந்த காரணமென்ன?' என்று வினவினேன். அவர் கண்ணீர் பெருக நின்று "பல மாதங்களாய் ஸ்வாமி அடியேனை உபேக்ஷித்திருக்கும் காரணம் தெரியவில்லை; நேரில் பிரார்த்தித்து ஸாளக்ராம க்ஷேத்ரத்திற்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போவதற்காகவே வந்தேன். இது நல்ல ஸமயம். ஒரு வாரத்திற்குள் அவசியம் புறப்பட்டு எழுந்தருளவேணும். இந்த யாத்திரைக்காக ஆகும் செலவுகளெல்லாம் என்னுடையவை; ஒன்றும் ஆலோசியாமல் புறப்படவேணும். இந்த ஸபையிலேயே வாக்தானம் செய்யவேணும்"

என்ருர். அப்போது உபந்யாஸ கோஷ்டி கலையவில்லை. யாவரும் உட்கார்ந்து கொண்டே யிருக்கிருர்கள். இவ்வளவையும் செவியுற்று அதிசயப்படுகிருர்கள். பிறகு நான் அவரைக் கேட்கின்றேன்—"எனக்கு ப்ராப்தமாகவேண்டிய ஸ்ரீஸாளக்ராம யாத்திரையைப்பற்றி உமக்கு ஏதுக்காக இவ்வளவு விசாரம்?" என்று. அதற்கு அவர் சொன்னது—"சில வருஷங்களுக்குமுன் ஸ்வாமியை அடியேன் ஸ்ரீஜகந்நாதபுரியில் ஸேவித்திருக்கிறேன். ஆனுல் நெருங்கிப் பழக ப்ராப்தமாக வில்லை. அதுமுதல் ஸ்வாமி அடிக்கடி கனவில் காட்சிதந்து எனக்கு ஸாளக்ராம யாத்திரையை நடத்திவைக்க வேணுமென்று அபேக்ஷையைக் காட்டி வருவதால் இதை பகவானுடைய நியமனமாகக்கொண்டு அடியேன் விஜ்ஞாபநங்களெழுதிக் சொண்டேன். வெகுநாளாய் ஸ்ரீமுகம் வருவதே நின்றுவிட்டபடியால் எப்படி யாவது அழைத்துக்கொண்டு போகவேணுமென்கிற உறுதியுடன் வந்திருக்கின் றேன்" என்று.

இது ஸ்ரீஸாளக்ராம பகவானுடைய பரமாநுக்ரஹ பரீவாஹமேயென்று கொண்ட அடியேன் இதற்கு எவ்விதமான தடையும் சொல்லலாகாதென்றும், இந்த ஸமயம் அவசியம் சென்று ஸேவித்தே வரவேணுமென்றும் உறுதிகொண்டேன். அப்போது உபந்யாஸ ஸபையாரும் ஒருவர் தப்பாமல் 'இந்த ஸமயத்தைஇழக்கவே கூடாது; இரண்டு மூன்று மாதங்களானுலும் அவசியம் இந்த யாத்திரையை நடத்தி முடிப்பதே நலம்; எம்பெருமானே நேரில் வந்து அழைப்பதுபோலன்ருே வுள்ளது' என்று கூறினுர்கள். சிலர் தாங்களும் உடன் வருவதாகச் சொன்னுர்கள். நாலைந்து நாள்களுக்குள்ளாகவே பிரயாணப்படுவதென்று உறுதி செய்து 'இரண்டு மாதங்கள் வரையில் உபந்யாஸத்திற்கு விராமம், என்று சொல்லியுமாயிற்று. உடனே காஞ்சீ புரம் வந்துசேர்ந்தவளவிலே, அஸ்மதாசார்யரான ஸ்ரீகாதிஸ்வாமி அப்போது திரு மேனியில் அபரிமிதமான அசக்தியுடன் (Chapra) சப்ரா என்னுமூரிலே [காசீப்ராந் தத்திலே] எழுந்தருளியிருக்கிறபடியாதலால் அங்கிருந்து தந்தி ஸமாசாரம் கிடைக்க ஸ்ரீஸ்வாமி திருக்குமாரரை யழைத்துக்கொண்டு அங்கே செல்லவேண்டியதாயிற்று. அன்றைக்கே சப்ராவுக்கு புறப்படலாயிற்று. நேபாள மஹந்து சென்னையிலிருந்து திருமழிசை முதலான சிலதிவ்ய தேசங்களை ஸேவித்துக்கொண்டு இரண்டு மூன்று நாளில் காஞ்சி வந்து சேருவதாகச் சொல்லிப் பிரிந்து போனவராதலால் அவரைச் சந்திக்க முடியாமலே நான் சப்ரா சென்றுவிட்டேன். அந்த மஹந்து 3, 4 நாளில் காஞ்சீபுரம் வந்து சேர்ந்திருந்தார்.

நான் சென்றவிடத்துச் செய்தியைச் சுருக்கமாக விஜ்ஞாபிக்கிறேன். சப்ரா சென்று சேர்ந்து ஸ்ரீஸ்வாமியின் திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவிக்கவும் வார்த் தையாடவும் ப்ராப்தமாயிற்று. "இங்கிருந்து புறப்பட்டுக் காஞ்சிக் கெழுந்தருள வேணும்" என்று பிரார்த்திக்கையில் 'அப்படித்தான் உத்தேசம்; இரண்டுநாளில் புறப்படுவோம்' என்று ஸாதித்து, காலை பத்துமணியிலிருந்து மாலை ஐந்துமணி வரையில் அநேக யோகக்ஷேம விசாரங்கள் செய்துகொண்டு வார்த்தை யாடிக் கொண்டே யிருக்கையில் 'எல்லாரும் சற்று எழுந்து அப்பால் போயிருங்கள்' என்று நியமித்துவிட்டு ஸந்தியாவந்தனம் செய்தருளிப் படுக்கையை விரிக்கச் சொல்லி சயனித்துக்கொண்டு தியானத்தில் அமர்ந்துவிட்டார். ஆறுமணிக்குமேல்

எல்லாரும் வந்து அருகேயிருந்து 'திருமேனியின் நிலை என்ன?' என்று கேட்கையில் 'ஒன்றுமில்லை' என்று ஸாதித்ததுதான் கடைசியான திருவாக்கு. பிறகு இரண்டு நாழிகைக்குள் திருநாடலங்கரித்தாயிற்று. இந்தச் செய்தி அன்றிரவே காஞ்சிக்குத் தெரியவந்தபடியால் இதைச் செவியுற்ற நேபாள மஹந்து இந்த ஸந்தர்ப்பத்தில் ஸாளக்ராம யாத்திரை நடைபெறுதென்று தாமே முடிவு செய்துகொண்டு ஸ்வஸ்தானம் சென்று சேர்ந்துவிட்டார். அன்றுமுதல் இன்றுவரை ஸ்ரீ ஸாளக்ராம யாத்திரை மனோரதமாத்திரமாகவே இருந்து வருகிறது.



ஸ்ரீமான் உ. வே.

## K. V. நரஸிம்ஹாசாரியர்

M.A., G.D.A., F.C.A.,

(Chartered Accountant)

இங்கு விளங்கும் மஹான் ஆடிடர் நரஸிம்மன் என்றே வழங்கப்படுபவர். இவர் தென்னேரி அகரம் அக்ரஹாரத்தைச் சேர்ந்தவர். சித்தூரில் வாழ்பவர். காஞ்சீபுரம், சென்னை, பெங்களூர், வேலூர் முதலான பலவிடங்களில் அலுவலகங்கள் உடையவர். இது ஸாதாரணமான பெருமை. இவர் செய்துபோரும் பகவத் பாகவத ஆசார்ய கைங்கர்யங்கள் அளவு கடந்தவை. ஸ்ரீமதித்யாதி முதலியாண்டான் ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தம் பெற்றவிவர் ஆசார்ய பக்தியில் தலை சிறந்தவர். காஞ்சீபுரம் தேவப்பெருமாள் மணவாள மாமுனிகளின் ஐப்பசித் திருமூல மஹோத்ஸவத்தை (அதாவது சாற்றுமுறை உபயத்தை) 1,500 ரூபாய் செலவில் பல வருஷங்களாக நடத்தி வருபவர். காஞ்சியிலேயே பொய்கையாழ்வார், பிள்ளைலோகாசார்யர் சாற்றுமுறை உபயத்தில் பெரும்பங்கு கொண்டவர். இதுவும் பலவாண்டுகளாகவாம். சமீபகாலத்தில் கூரத்தில் ஆழ்வானுடைய திருத்தேர்த் திருப்பணிக்கு ஆயிரம் ரூபாய் வழங்கிய வள்ளல். இங்ஙனே நானறிந்தவையும் அறியாதவையும் பல பல. நேற்றைய மார்கழி மாதத்தில் சென்னையில் நமது திருப்பணிக்கு ப்ரவசன கோஷ்டியில் முப்பதும் தப்பாமே (ஆப்ஸெண்டும் லேட்டும் இல்லாமல்) கோஷ்டியை அலங்கரித்திருந்ததனால் இவருடைய ஆத்மகுண பரிபூர்த்தியை மிகமிக அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. இவர்க்கு "ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதி" என்று பிருது சாத்தினேன்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் ஜகத்குரு

# ஸ்ரீமத் காதி அனந்தாசார்ய ஸ்வாமிகளின் சதாப்தீ மஹோத்ஸவம்

ஸ்ரீமான் உ. வே. திருமலை அனந்தாண்பிள்ளை (குன்றபாக்கம்) க்ருஷ்ணமாசாரியர்,
சிரோமணி வித்வான்.

ஸ்ரீமதித்யாதி விசேஷணங்களுக்கு அஸாதாரண லக்ஷ்யபூதராய்த் தென்னாடும் வடநாடும் தொழநின்ற திருவடித்தாமரைகளையுடையராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் ஜகத்குரு ***காதி அனந்தாசார்ய ஸ்வாமியின் சதாப்தீ மஹோத்ஸவம்*** பல பத்திரிகைகளிலும் விசிஷ்ய ஸ்ரீராமாநுஜன் முன்னிதழிலும் வெளியிட்டிருந்தபடியே, நிகழும் ப்ரமாதீச வருஷம் தை மாதம் 30ம் தேதி தொடங்கி மாசி மாதம் 10-ம் தேதி வரை *(12—2—74 To 22—2—74)* மிகவும் சிறப்பாக ஸ்ரீஸ்வாமி திருமாளிகையில் நடந்து முடிவுபெற்றது.

இம்மஹோத்ஸவத்தின் முதல் நாள் மாலை 6 மணிக்கு உபயவேதாங்க ஸ்ரீபாஷ்ய பகவத்விஷய ரஹஸ்யக்ரந்த ஸ்ரீராமாயண பகவத் கீதா ஸ்ரீபாகவதாதி க்ரந்தங்களின் பாராயணம் தொடங்கப் பெற்றது. மறுநாள் முதல் காலை பகல் மாலைகளில் பூர்ணமாக ஸேவிக்கப்பட்டன.

## வேதம்

ருக்வேதம் க்ருஷ்ணயஜுர்வேதம் சுக்லயஜுர்வேதம் ஸாமவேதம் என்றவேதங்கள் காலைமேணிமுதல் 8வரை, மாலை2மணிமுதல்4 மணிவரை திருமாளிகையிலும் மாலை 6-30 முதல் 7-30 வரையில் தேவப்பெருமாள் திருவீதிப்ரதக்ஷிணத்திலுமாக ஏறக்குறைய 45ஸ்வாமிகளால் மிகவும் ச்ராவ்யமாகப் பாராயணம் செய்யப்பட்டன.

## திவ்யப்ரபந்தம்

காலை 8 முதல் 10-30 வரை முதலாயிரமும் பெரியதிருமொழியும், மாலை 7-30 முதல் 10 வரை இயற்பாவும் திருவாய்மொழியும் 75 ஸ்வாமிகளால் செவிக்கினிய செஞ்சொல் என்ற திருநாமம் ஸார்த்தகமாகும்படி ஸேவித்துப் பூர்த்திசெய்யப்பெற்றன. இவ்வுபயவேதகோஷ்டியை அநுபவித்தவர்கள் உண்மையில் விண்ணுளாரிலும் சீரியரே என்பதில் ஸந்தேஹம் சிறிதுமில்லை. "பாடுநல் வேதவொலி பரவைத் திரைபோல் முழங்க," என்ற நம்மாழ்வார் ஸ்ரீஸூக்தியும், "முதுநான்மறை வீதிதொறும் அலையார்கடல்போல் முழங்கும்" என்ற திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தியும் அடிக்கடி நினைவுக்கு வந்துகொண்டிருந்தன.

## மற்ற பாராயணங்கள்

வேதபாராயணம் நடக்கும் ஸமயத்திலேயே ஸ்ரீ ராமாயணம் ஸ்ரீ பகவத்கீதை ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் ஸ்ரீபாகவதம் ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் பகவத்விஷயம் (ஈடுமுப்பத்தாறுயிரம்) மணவாளமாமுனிகளின் வ்யாக்யான ஸஹிதமான முமுக்ஷுப்

படி தத்வத்ரயம் ஸ்ரீ வசனபூஷணம் ஆசார்யஹ்ருதயம் என்னும் நான்கு ரஹஸ்ய க்ரந்தங்கள் இவையெல்லாம் பூர்ணமாகப் பதினைந்து ஸ்வாமிகளால் ஸேவிக்கப் பெற்றன.

## வித்வத்ஸபை

தினந்தோறும் மாலை 4 மணிமுதல் 6 வரையிலும் ஏகாதசி வெள்ளிக்கிழமை ச்ரவணம் என்றிந் நாட்களில் பேரருளாளன் பெருந்தேவித்தாயார் புறப்பாட்டை யொட்டி 3-30 மணி முதல் 5-30 வரையிலும் வித்வத்ஸதஸ்ஸு திருமாளிகை வாசற் பந்தலில் நடைபெற்றது. வித்வத்ஸதஸ்ஸின் ஆரம்பத்தில் ஒவ்வொருநாளும், இளமை தொடங்கி ஸ்ரீ காதிஸ்வாமி திருவடிகளில் அத்யந்த ப்ரவணரும் ஸ்ரீ ஸ்வாமி ஸந்நிதி யிலேயே பெரும்பாலும் வித்யாக்ரஹணங்கள் பண்ணி ப்ரதிஷ்டிதரும் ஸ்ரீ ஸ்வாமி விஷயமாகப் பல ஸ்துதி நூல்கள் பணித்தவருமான ஸ்ரீ உ. வே. ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி மஹாமஹிமோபாத்யாய ப்ர. அண்ணங்கராசார்ய ஸ்வாமி, தம் ஆசார்யரான ஜகத்குரு காதிஸ்வாமியைப் பற்றிய சித்ரகவிகள் இயற்றி அநு ஸந்தித்து அவற்றின் தாத்பர்ய விவரணம் செய்தருளினர். காலையிலும் இரவிலும் அருளிச்செயல்கோஷ்டி முடிந்தவுடன் அவ்வப்போது ஸேவித்த வேத திவ்ய ப்ரபந்த ஸூக்திகளைத் தொடர்பு படுத்தி ஒருமணிகாலத்திற்குக் குறையாமல் (ப்ர. அ. ஸ்வாமி) உபந்யஸித்த அழகு வாசாமகோசரம். ரஸவாதம் கைப்பட்டவனுக்குத் தொட்டதெல்லாம் பொன்னுமாப் போலே எவ்விஷயத்தை எடுத்துக்கொண்டாலும் அவ்விஷயத்தை ரஸிகர்களின் மனம் குழையும்படியும் இனி இதுக்கு அவ்வருகு இல்லை யென்னலாம்படியும் உபந்யஸிக்கும் சக்தி, வ்யாக்யான வாசஸ்பதி என்னும் விருது பெற்றுள்ள நம்ஸ்வாமி ஒருவர்க்கே அஸாதாரணம் என்று ஸபையிலுள்ள வித்வான்கள் பேசும்படி யிருந்தது. அப்படி ஸ்ரீஸ்வாமி உபந்யஸித்தவற்றில் நினை வுக்கு வருகின்ற சிலவற்றை இங்குக் குறிப்பிடுகிறேன்.

1. உபநிஷத் என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள். ''ப்ரஹ்ம வேத ப்ரஹ் மைவ பவதி'' என்ற ச்ருதியிலுள்ள ஏவகாரத்திற்கு ''விஷ்ணுரேவ பூத்வா இமால் லோகாநபிஜயதி'' என்ற ச்ருதியிலுள்ள ஏவகாரத்தில் போல இவ என்னும் பொருள் கொள்ளவேணுமென்று உபபாதித்து, ஸாயுஜ்யமே ச்ருதிக்கு அபிமதமான மோக்ஷம் என்று ஸ்தாபித்தது.

2. வாக்யாந்வயாதிகரணத்தில் கூறப்பட்டுள்ள மூன்று மதங்களில் கடைசி யான காசக்ருத்ஸ்நருடைய மதமே ஸ்ரீவேதவ்யாஸபகவானுக்கு அபிமதமென்று நிரூபித்தது.

3. 'அக்நீஷோமீயாமாலபேத...அந்நவான் அந்நாத: ஸ்யாமிதி' என்ற ச்ருதி வாக்யத்தையும் பெருமாள் திருமொழியில் தேவகியின்புலம்பலாகக் குலசேகரப் பெருமாள் அருளிச்செய்த 'ஆலைநீள்கரும்பன்னவன்தாலோ' என்று தொடங்கும் திருமொழியையும் தொடர்பு படுத்தி, தேவகீவஸுதேவர்களை அன்னவான்களாகவும் யசோதாநந்தகோபர்களை அந்நாதர்களாகவும் ஸமந்வயப்படுத்தி உபந்யஸித்தது.

4. யஸ்யாஸ்மி ந தமந்தரேமி, ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய, ந தேஹம் ந ப்ராணுந் என்னும் ச்ருதி--ஸ்ரீராமாயண-ஸ்தோத்ரரத்ன வாக்யங்களையும் ஏருளுமிறை யோனும் என்ற திருவாய்மொழிப்பதிகத்தையும் ஒருங்கவிட்டு உபந்யஸித்தது.

5. ✡வண்டினமுரலுஞ்சோலை என்னும் திருமாலைப்பாசுரத்தில் அழகியமணவாளனே வண்டாகவும் மயிலாகவும் கொண்டலாகவும் குயிலாகவும் கூறப்படுமவன் என்று ஸ்ரீரங்கராஜஸ்தவ ச்லோகங்களைக் கொண்டு பரக்க நிரூபித்துக் காட்டியது.

6. ✡அஞ்சிறைய மடநாராய் ✡வைகல்பூங்கழிவாய் ✡பொன்னுலகாளீரோ *எங்கானலகங்கழிவாய் என்னும் நான்கு பதிகங்களால் நம்மாழ்வார் முறையே வ்யூஹத்திலும் விபவத்திலும் பரத்வத்வயத்திலும் (பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும்) அர்ச்சையிலும் தூதுவிட்டமையை 'தம்பிழையும் சிறந்தசெல்வமும்' என்று தொடங்கும் ஆசார்ய ஹ்ருதய சூர்ணிகையின்படி விளக்கியருளியது.

7. ஒழிவில்காலமெல்லாம் என்னும் நம்மாழ்வார் பாசுரத்தில் அர்த்தபஞ்சகம் ப்ரதிபாதிக்கப்படுவதை ஸூக்ஷ்மமாக ஆராய்ந்து அருளிச்செய்தது.

8. 'ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே' என்ற உபநிஷத்வாக்யத்திலும் 'தருக்கினல்...வேங்கடம்கோயில் கொண்டு அதனோடும் வானிடையருக்கன் மேவிநிற்பாற்கு' என்னும் கலியன் பாசுரத்திலும் 'த்யேயஸ்ஸதா ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ' என்னும் ச்லோகத்திலும் ஸூர்யனுகச் சொல்லப்பட்டவர் நம்மாழ்வார் என்பதை 'யத்கோஸஹஸ்ரமபஹந்தி' என்ற பராங்குசாஷ்டக ச்லோகத்தைக் கொண்டு ரஸம்பட உரைத்தருளியது.

9. பெரியாழ்வார்—'மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு' என்பதனல் ஆண்டாளின் கூந்தல்மேல் காதல்வைத்த வடபெருங்கோயிலுடையானைக் குறிப்பிடுகிருர் என்றும், ஆண்டாள்—'மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூருறைவான்' என்பதில் அன்னமாகப் பெரியாழ்வாரைக் குறிக்கிருள் என்றும் விரிய உரைத்தது.

10. *எனதாவியுள் கலந்த, *ஆறெனக்குநின்பாதமே, ✡தாள்களை எனக்கே *உதவிக்கைம்மாறு என்ற திருவாய்மொழிப் பாசுரங்களையும், *வபுராதிஷுயோபி கோபிவா, *மம நாத யதஸ்தி என்னும் ஸ்தோத்ர ரத்ந ச்லோகங்களையும் கொண்டு ஆத்ம ஸமர்ப்பணமும் ததநுசயமும் யாவதாத்மபாவியாக நடக்கவேணுமென்று உபந்யஸித்தது.

11. 'யதா யதா ஹி தர்மஸ்ய-ஆத்மானம் ஸ்ருஜாம்யஹம்' என்ற கீதாச்லோகத்தில் ஆத்மசப்தம் ஜ்ஞாநியைச்சொல்லுகிறதென்பதை-த'அறிவாருயிரானாய்'என்ற திருவாய்மொழிப் பாசுரப் பகுதியையும் 'ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்' என்ற கீதா வசனத்தையும் கொண்டு நிரூபித்து அப்படிப்பட்ட ஞானி ஸ்ரீ காதிஸ்வாமி என்று மூதலித்தது.

**12.** ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் அருளிச்செய்த வரவரமுநி சதகத்திலுள்ள, 'அவாக்பூஷாஜுஷ்டை:......', 'ஸூராஹாராஸாரீகரணசண த் ஸூக்தி...' என்னும் இரண்டு ச்லோகங்களை விவரித்து மாமுனிகளுடையவும் அவர்தம் ஸ்ரீஸூக்திகளுடையவும் பெருமையைப் பரக்கப் பேசியருளியது.

இன்னும் பல தலைப்புகளில் ஸ்ரீ ஸ்வாமி ஸம்ஸ்க்ருத ஹிந்தீ பாஷைகளில் அருளிய உபந்யாஸங்கள் பல உள்ளன.

ஸ்ரீமான் உ. வே. வித்வான் அக்காரக்கனி தி. அ. ஸம்பத்குமாராசாரியர், M. A., ஸ்வாமி நசிகேதஸ் ஜாநச்ருதி உபகோஸலன் என்றிவர்களின் உபாக்யானங்களின் வாயிலாக இதர விஷய வைராக்யத்தைப் பற்றியும் முமுக்ஷுத்வத்தைப்பற்றியும் நயம்பட உபந்யஸித்தனர். ப்ர. அண்ணங்கராசார்யஸ்வாமி (தம் ச்வசுரர்) தமிழில் செய்த உபந்யாஸங்களை ஹிந்தியில் மொழிபெயர்த்தும் ஸ்வதந்த்ரமாக ஹிந்தியில் மதுரமாக உபந்யஸித்தும் ச்ரோதாக்களை உகப்பித்தது குறிப்பிடத்தக்கது. அப்படியே திருநாங்கூர் வித்யாபூஷணம் ப்ர. அண்ணங்கராசார்ய ஸ்வாமியும், அண்ணு ஸ்வாமி தமிழில் உபந்யஸித்தவற்றை ஹிந்தி பாஷையில் மொழிபெயர்த்ததோடு, உபநிஷத்வாக்யங்களைக் கொண்டு ஆசார்யனுடைய பெருமையைப்பற்றித் தமிழில் ஸ்வதந்த்ரமாகவும் உபந்யாஸம் செய்தருளினர். மற்றையோர் உபந்யாஸம் செய்ததைப்பற்றி இதன் கீழே குறிப்பிடுகிறேன்.

| | பெயர் | விஷயம் |
|---|---|---|
| 1 | ஸ்ரீ உ. வே. க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் M.A.,B.L. அட்வகேட். ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிப ஸ்வாமி | புருஷ ஸூக்தமும் பகவத்க்ருபையின் நிர்ஹேதுகத்வமும். |
| 2 | ஸ்ரீ P. B. K. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி | ஸ்ரீ பாஷ்யமங்கள ச்லோகத்தில் 4 அத்யாயங்களின் பொருள்கள் ஸங்க்ரஹிக்கப்பட்டுள்ளமை |
| 3 | ஸ்ரீ உ. வே. சதாபிஷேகம் தி. அ. கோவிந்தநரஸிம்ஹாசார்ய ஸ்வாமி | ப்ரதிவாதி பயங்கரம் அண்ணுவின் தனிப்பெருமை. |
| 4 | ஸ்ரீ வில்லிபுத்தூர் விஞ்சிமூர் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி | கண்ணன் என்ற சொல்லுக்குப் பல பொருளுண்டென்பது. |
| 5 | ஸ்ரீR. ரங்கராஜ ஐயங்கார்M.A.,B.T., மதுரை | கம்பர் வைஷ்ணவரென்பதும் அவரது பாடல்களை நம்மாசார்யர்கள் தமது உரைகளில் மேற்கோளாகக் காட்டியிருப்பதும். |
| 6 | ஸ்ரீ பிள்ளைலோகம் பாஷ்யகாசார்ய ஸ்வாமி | —ஆசார்ய லக்ஷணம். |
| 7 | ஸ்ரீ பிள்ளைலோகம் ஸ்தலசயனத்துறைவார் | ஸ்வாதீ—சோதி என்பதை விவரித்து ஸ்ரீ காதிஸ்வாமியின் பெருமையை விளக்கியது. |
| 8 | ரா. கண்ணன் ஸ்வாமி | —“புரா ஸூத்ரைர்வ்யாஸ:” என்னும் ச்லோக விவரணம். |
| 9 | குளத்தூர் விஜயராகவாசார்ய ஸ்வாமி | —ப்ரமிதாதிகரணம். |
| 10 | பாதூர் ராகவாசார்ய ஸ்வாமி | —அநாஸ்ருத்தி: சப்தாத் என்னும் ப்ரஹ்மஸூத்ரம். |
| 11 | கோமல் சேஷாத்ரியாசார்ய ஸ்வாமி | —ஸ்ரீ காதிஸ்வாமியின் மகிமை. |
| 12 | காணியம்பாக்கம் கோவிந்தராஜன் | —பாஞ்சராத்ராதிகரணம். |
| 13 | N. V. நரஸிம்மாசார்ய ஸ்வாமி | —பூமாதிகரணம். |
| 14 | R. க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி | —வேதத்தின் பெருமை. |
| 15 | ப்ரஹ்மஸ்ரீ ராமசந்த்ர சாஸ்த்ரிகள் | —வேதமும்-ராமாயணமும். |

| | | |
|---|---|---|
| 16 | எம்பார் வட்டமணி ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி | —திருமங்கையாழ்வாரும் - தேவப்பெருமாளும் |
| 17 | கோயில். ப்ரதிவாதி பயங்கரம் ராமாநுஜாசார்ய ஸ்வாமி | —தீர்ப்பாரையாமினி (வெறிவிலக்கு) |
| 18 | கோயில். ப்ர. ரங்காசார்ய ஸ்வாமி | —வாத்ஸல்யகுணம். |
| 19 | தி. அ. அக்காரக்கனி அனந்தாழ்வான் | —ஏற்றகலங்கள் என்னும் திருப்பாவைப் பாசுரத்தில் ஸ்ரீ காதி ஸ்வாமியின் பெருமை |
| 20 | K. B. தேவராஜன் | —ஸ்ரீ காதிஸ்வாமியின் பெருமை. |
| 21 | K. ஸ்ரீநாதன் | —ஸ்ரீ காதிஸ்வாமி விஷயமாக ப்ர. அ. ஸ்வாமி ஸாதித்த மங்களாசாஸனத்தை அநுஸந்தித்து அவர்தம் பெருமையைப் பேசியது. |

22. புரிசை தண்டீரி ஸ்ரீநிவாஸ தாதாசாரியர்—உப :லிங்காதிகரணம்

இன்னும் பல பெரியார் பல விஷயங்களில் உபந்யாஸம் செய்தனர். விரிவுக்கஞ்சி நிற்கிறேன். அடியேனும் ஒழிவில் காலப்பாசுரத்தைப்பற்றிச் சிறிது விண்ணப்பித்தேன்.

## அகில பாரதீய ஸ்ரீ வைஷ்ணவ மகாநாடு

ஸ்ரீ ராமாநுஜ மிஷன் ஆதரவில் ஸ்ரீரங்கம் க்ஷேத்ரீய ஸமிதியின் மேற்பார்வையில், ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா ஸந்நிதியில் 16—2—74 சனிக்கிழமையும், 17—2—74 ஞாயிற்றுக்கிழமையும் பகல் 1 மணி முதல் 5 மணி வரை ஸ்ரீ காதிஸ்வாமியின் சதாப்தீ மகோத்ஸவத்தையொட்டி அகில பாரதீய ஸ்ரீ வைஷ்ணவ மகாநாடு நடைபெற்றது. முதல்நாள் திரு. ராதாக்ருஷ்ண பிள்ளை B A., B.L., அவர்கள் தலைமையில் ஸ்ரீமான்களான டாக்டர் V. V. ராமாநுஜம் M A., M. Sc., Phd, அவர்களும், R. வெங்கடராமாநுஜம் அவர்களும், K. A மணவாளன் B. A., B. O. L., அவர்களும் முறையே மணவாளமாமுனிகள், எம்பெருமானார் தரிசநம், பெருந்தமிழன் என்னும் தலைப்புக்களில் சொற்பொழிவாற்றினர். இரண்டாம்நாள் ஸ்ரீமான் R. பத்மநாபன், I.A.S. அவர்களின் தலைமையில் ஸ்ரீமான் R. V. சேஷாத்ரி ஐயங்கார் B. A., B. L., அவர்களும், இரா. ஸுராஜ் அவர்களும், குமாரவாடி S. ராமாநுஜய்யங்கார் அவர்களும் முறையே ஸ்ரீ வசனபூஷணஸாரம், கம்பன்கண்ட வைணவம், கூரேச விஜயம் என்னும் தலைப்புக்களில் விரிவுரை நிகழ்த்தினர். பெங்களூரிலிருந்து ஸ்ரீமான் உ. வே. டாக்டர் V. ராம ஐயங்கார் ஸ்வாமியும் சுப்ரீம் கோர்ட் அட்வகேட் வெங்கட்ரங்கையங்காரும் மற்றும் பலரும் கோஷ்டியைச் சிறப்பிக்கச் செய்தது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது. ஸ்ரீமதி பாலபாரதி யதுகிரியம்மாள் அண்ணா ஸ்வாமி இயற்றிய வரவரமுனி தண்டகத்தை உயர்ந்த ஸங்கீதத்தில் பாடினதை ஸபையார் அனைவரும் மெச்சினர்கள். (ஸ்ரீ வரவரமுனி தண்டகம் உரையுடன் தேவநாகரலிபியில் அச்சிடப்பட்டுள்ளது. இம்மகாநாட்டில் ஸ்ரீ உ. வே. S. V. வரதராஜய்யங்கார் ஸ்வாமி கலந்துகொண்டு சிறப்பித்தது குறிப்பிடத்தக்கது. இரண்டு நாட்களிலும் தலைவர் இருவரும் வைணவமதத்தைப் பற்றியும் அதற்கு நன்றாகத் தொண்டாற்றிய ஸ்ரீ காதிஸ்வாமியைப் பற்றியும்

***மிகவும் கொண்டாடிப்பேசியது யார்க்கும் மறக்கற்பாலதன்று. சனிக்கிழமை மாலை ஸங்கீத வித்வான் அருளிச்செயல் திலகம் M. N. வெங்கடவரதப்பிள்ளை குழுவினர் திவ்யப்ரபந்தப் பண்ணிசைக் கச்சேரி செய்தனர்.***

## ஸமாப்தி தினம்

இங்ஙனமாகப் பத்துநாட்கள் உத்ஸவம் இனிது நடந்தது. 11வது நாள் காலை 7முதல் 9மணிவரை தினப்படி வேதாதிபாராயணங்களும் அவற்றின் சாந்தியும் நடைபெற்றன. 9முதல் 11மணிவரை திருப்பாவை இராமாநுச நூற்றந்தாதி உபதேசரத்தினமாலை ஸேவை நடைபெற்றது. பிறகு கோயில் திருமலை முதலிய பல திவ்யதேசங்களிலிருந்து கொண்டுவரப்பெற்ற மரியாதைகள் வரவேற்கப்பெற்றன. உடனே திவ்யப்ரபந்த சாற்றுமுறை லோகோத்தரமான ப்ரக்ரியையில் நடந்தேறியது. பிறகு ததீயாராதனம் முடிந்தவுடன் பகல் 3 மணிமுதல் 5 மணிவரை வித்வத் ஸதஸ் நடைபெற்றது. அதில் ஸ்ரீகாதிஸ்வாமி அருளிய புருஷஸூக்த பாஷ்யக்ரந்தமும் ஸ்ரீராமநுஜமிஷன் வெளியீடான ஸ்ரீகாதிஸ்வாமி நூற்றுண்டுவிழாச் சிறப்பு மலரும் (ஸ்வாமி அருளிய உபந்யாஸத் தொகுப்பு) ஸ்ரீ. உ. வே. அண்ணு ஸ்வாமியால் அரங்கேற்றப்பட்டன. வித்வான் தி. ஸ்ரீநிவாஸன் M.A. அவர்கள் ஸமர்ப்பித்த—அனந்தாசார்ய ஸ்வாமி பாமாலை என்னும் பெயர்பெற்ற 11 செய்யுள்களைப் பிள்ளைலோகம் ஸ்ரீ ஸ்தலசயனத்துறைவார் ஸபையில் படித்தனர். இரவு 8 மணிமுதல் 11மணிவரையில்—மஹோத்ஸவத்தில் வேதாதிபாராயணங்களில் அந்வயித்த ஸ்வாமிகளுக்குத் தக்கமுறையில் ப்ர. ஸ்ரீநிவாஸாசாரியர் (காதி ஸ்வாமியின் திருப்பேரனுர்-வித்வச்சிரோமணி) ஸம்பாவனைகள் ஸமர்ப்பித்ததுடன் அண்ணு ஸ்வாமிகள் தம்முடைய திருமேனித் தளர்ச்சியை லக்ஷ்யம் செய்யாமல் ஒவ்வொரு நாளும் காலை 5 மணி முதல் இரவு 11 மணிவரையில் உடனிருந்து இந்த கோஷ்டிகளை மிகவும் வியக்கத்தக்க முறையில் நடத்திவைத்ததற்கு அவரிடம் நன்றிபாராட்டி, அவர் தாம் செய்த வுதவிக்குத் தலையல்லால் கைம்மாறிலேனென்று உபசாரம் கூறினுர். பிறகு ஸ்ரீ காதி ஸ்வாமியின் அத்விதீய திருக்குமாரரும் உண்மையான வித்வானுயிருந்தும் தமது புலமையை வெளிக்காட்டிக் கொள்ளாதவரும் ஆத்மகுணங்கட்குக் கொள்கலமுமான ஸ்ரீ ப்ர. காதி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி இக்கைங்கர்யத்தில் அந்வயித்த ஸ்வாமிகள் திறத்தில்—நன்ருகக் கைங்கர்யத்தை நடத்திக் கொடுத்ததற்கு க்ருதஜ்ஞதாநுஸந்தானம் செய்து, ‘ப்ரமாதிகமாக ஏதாவது அபசாரம் நேர்ந்திருந்தால் க்ஷமித்தருளவேணும்’ என்றும் ப்ரார்த்தித்தார். மஹோத்ஸவத்தை இவ்வளவு நன்ருக நடத்திவைத்த ஸ்ரீ காதி ஸ்வாமியின் திருக்குமாரரையும் அவர் தம் திருக்குமாரர்கள் மூவரையும் ஸ்ரீ. உ. வே. அண்ணு ஸ்வாமி வேதருக்குக்களாலும் அருளிச் செயல்களாலும் பல பெரியார்களுடன் கூடி மங்களாசாஸனம் செய்தருளினர். “வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே” என்ற பேரொலி வானளாவியது. பிறகு கோஷ்டி கலைந்தது.

## ததீயாராதனம்

திருமாளிகையில் பந்துபாந்தவவர்க்கங்களுக்கும் அண்ணு ஸந்நிதியில் மற்ற ஸ்வாமிகளுக்கும் ததீயாராதனம் மிகச் சிறந்த ரீதியில் 11 நாட்களும் செய்விக்கப்பட்டது. காலை மாலைகளில் ஸ்வாமிகளுக்குப் பாலமுது முதலிய லௌகிக ஸௌகரி

யங்களும் விசேஷமாகச் செய்துகொடுக்கப்பட்டன. யார் திருவுள்ளமும் புண்படாதவாறு பரிசாரகர்கள் நடந்துகொண்டவிதம் பாராட்டத்தக்கது.

### முன்னின்று நடத்திவைத்தவர்

கேந்த்ரீய சதாப்தீ ஸமிதிக்கு மஹாமந்த்ரியான ஸ்ரீமான் ராஜா லக்ஷ்மீநிவாஸஜீ கனேடிவாலா அவர்களும் ஷெ ஸமிதிக்குத் தலைவரான ஸ்ரீவாஸுதேவ ஸோமாணி அவர்களும் இவ்வுத்ஸவத்தை முன்நின்று நடத்திவைத்தார்கள்.

இந்த சதாப்தீ மஹோத்ஸவத்தில் உபஸ்த்திதர்களான வித்வான்களில் ஸ்ரீமதுபயவே வித்வான் ஸ்ரீராமாயணபூஷணம் கோமல் சேஷாத்ரியாசார்ய ஸ்வாமி தமது உபந்யாஸத்தில் ஆத்ம ஸாக்ஷிகமாகவும் நிஷ்பக்ஷமாகவும் ஸாதித்த ஒருவார்த்தை எல்லாரும் கொண்டாடத் தக்கதாக இருந்தது. அதாவது "ஆங்காங்கு வித்வான்கள் உபந்யஸிக்குமவை அண்ணாஸ்வாமியின் உபந்யாஸங்களிலிருந்தும் அவருடைய பலபல நூல்களிலிருந்தும் கையாளப்படுமவையேயாம். மகாபாரதத்தைப்பற்றிச் சொல்லும்போது 'யதிஹாஸ்தி ததந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்' என்று சொன்னது இவருடைய வாக்குக்களுக்கும் ஒக்கும்" என்று நெஞ்சு கனிந்து ஸாதித்தது.

இங்ஙனம்,
**தி. அ. க்ருஷ்ணதாஸன்,**
22—2—74.

## சதாப்தீ மஹோத்ஸவ ஸமாரோஹம்

*(பத்ராதிபர் P. B. A.)*

ஸ்ரீ காஞ்சீ ஜகத்குரு காதி ஸ்வாமியின் சதாப்தீ மஹோத்ஸவ நிகழ்ச்சிகளைப்பற்றி அடியேனே எழுதவேணுமென்று பாரித்திருக்கையில், வர்த்தமான காதி ஸ்வாமியின் த்ருதீய ஜாமாதாவான ஸ்ரீமான் தி. அ. க்ருஷ்ணமாச்சாரி (ந்யாயவேதாந்த வித்வான், செய்திகள் அனைத்தையும் ஒன்றுவிடாமல் மிக அழகாக எழுதி அனுப்பியிருந்தான். அதை வாசிக்கக்கேட்டபோது உண்மையில் உள்ளம் பூரித்தேன். அடியேனும் ஸத்தைபெறவேண்டி சிறிது எழுதுகிறேன். ஸ்ரீ காதி ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் பதினேழு பிராயமேவாசி. ஸ்ரீ ஸ்வாமியினுடைய பதினேழாவது திருநக்ஷத்ரத்தில் அடியேன் ஜனித்தவன். ஏழெட்டு பிராயம்வரையில் ஸ்ரீ ஸ்வாமியைத் தெரிந்துகொள்ள ப்ரஸக்தியில்லாமலே போயிற்று. எட்டாவது பிராயம் முதலாக ஸ்ரீ ஸ்வாமியின் திருவடிகளுக்கு அணுக்கனாய் இருந்துவந்தேன். ஸ்ரீ ஸ்வாமி வடநாட்டு ஸஞ்சாரமாக எழுந்தருளும் காலம் தவிர காஞ்சியில் நியதவாஸம் செய்தருளும் காலங்களில் 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி' என்னும் படியாகவே இருந்துவந்தேன். வடநாட்டுப் பயணங்களிலும் சில பர்யாயங்கள் உடன் செல்லும் பாக்கியம் பெற்றிருந்தேன். கடைசியாக ஸ்ரீ ஸ்வாமி பரமபதித்தருளினது வடநாட்டில் காசிக்கு நெடுந்தூரத்திலாகும். அவ்விடத்திற்கு அடியேன் விடைகொள்ள ப்ரமேயமே இல்லை. ஆனாலும் எம்பெருமான் எப்படியோ அடியேனைக் கொண்டு

போய் ஸ்ரீ ஸ்வாமி திருவடிகளில் சேர்ப்பித்தான். அன்று திருவாடிப்பூரத் திருநாள். காலை 8 மணி முதல் மாலை 5 மணிவரையில் ஒரு நிமிடமும் ஸ்வாமியை விட்டுப் பிரியாமல் பல விஷயங்கள் வார்த்தையாட நேர்ந்தது. இடையிடையில் ஸ்வாமிக்கு மயக்கம்போல் வந்துகொண்டிருந்தது. அப்போது திருப்பாவையும், நாச்சியார் திருமொழியும் ஸேவித்து வந்தேன்.

இடை யிடையில் தெளிவுடன் திருக்கண் விழித்துப் புன்முறுவல் செய்தருள்வர். ஸ்ரீ ஸ்வாமியின் அத்விதீயரான திருக்குமாரரை ஸ்ரீ ஸ்வாமி ஸன்னிதிக்கு அழைத்துச் செல்வதற்காகவே அடியேன் அங்கு விடைகொண்டேன். இடையில் ஒரு வார்த்தை கேட்டருளினர் காதி ஸ்வாமி—"என்ன, யையும் அழைத்து வந்தாய்? நான் ஆசார்யன் திருவடிக்குப் போய்விடுவேன் என்று எண்ணமோ?" என்று. அப்போது அடியேன் என்ன விண்ணப்பம் செய்தேன் என்று நினைவுக்கு வரவில்லை. 38 ஆண்டுகள் கடந்துவிட்டன. இரண்டு மூன்று நாட்களில் புறப்பட்டு ஊருக்குப்போவோம் என்று ஸாதித்தார். பரமஸந்தோஷமாகவும் பல வார்த்தைகள் ஸாதித்தருளினர். அவற்றை இப்பொழுது எழுதிப்பயனென்? உடனேயே ஸந்தியாவந்தனம் அனுஷ்டானமாகி நாற்காலியில் வீற்றிருந்தபடியே தியானத்தில் அமர்ந்தார். தைத்ரியோபநிஷத்தைப் பாராயணம் செய்யத் தொடங்கினேன். "ரஸோ வை ஸ: ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆனந்தீ பவதி" என்னும் இடம் பாராயணம் செய்கையில் விழித்துப் பார்த்தருளினர். அவ்வளவே. உடனே ப்ரம்மானந்தம் எய்தினர். அந்த ஸந்தர்பத்தில் உடனிருந்தது திருக்குமாரருக்கும் அடியேனுக்கும் எதிர்பாராத பாக்கிய விசேஷம்.

இனி ப்ரக்ருத விஷயத்திற்கு வருகிறேன். இப்போது நடந்த சதாப்தீ மஹோத்ஸவம் "ந பூதோ ந பவிஷ்யதி" என்னும்படியாகத் தான் நடைபெற்றது. பூர்வாசாரியர்களில் யாருக்கும் இப்படி நடந்ததில்லை. ஸமீபகாலத்தில் 600 ஆண்டு நிறைவுவிழா என்றும் 700 ஆண்டு நிறைவு விழா என்றும் ஆசார்ய ஸார்வபௌமர்கள் இருவர்க்கு தேசமெல்லாம் உகக்க நடந்தது. ஆனல் இந்த நிகழ்ச்சியின் ப்ரக்ரியை வேறு. இப்போது நடந்த சதாப்தீ மஹோத்ஸவம் பரமவிலக்ஷணம் என்றே சொல்லலாகும். அடியேன் இப்போது 83வதுபிராயத்தின் இறுதியில் இருக்கிறேன். இடையில் மூன்று தத்துக்களுக்குத் தப்பிப் பிழைத்தேன். இந்த மஹோத்ஸவானுபவ ஆனந்தத்தைப் பெறுவிப்பதற்காகவே எம்பெருமான் இங்கு வைத்தான் என்பது நிஸ்ஸந்தேஹம். ஏறக்குறைய ஒருயாத காலமாகவே, ஏன்? ஒரு ஸம்வத்ஸரகாலமாகவே இந்த மஹோத்ஸவப் பாரிப்புகளால் தூய்மை பெற்ற நெஞ்சுடையனாய் இருந்தேன். இந்தப் பத்து நாளிலும் சோர்வு சோம்பல்கள் என்னைவிட்டு அகன்றவிதம் எனக்கே தெரியவில்லை. ஸுதர்சன சதகத்தில் ஒரு ச்லோகத்தில் "ஹந்து தந்த்ராலுதாம் வ:" என்று கூறின பலன் அடியேனுக்கு இந்தப் பத்து நாளும் பலித்தவிதம் எனக்கே ஆச்சர்யமாய் இருக்கிறது. தென்னாட்டிலிருந்தும், வட நாட்டிலிருந்தும் வந்த மஹான்களைக் கண்டும் ஸம்பாஷித்தும் பெற்ற பேரானந்தம் ஒருபுறமிருக்க

ஸ்ரீஸ்வாமியின் திருக்கல்யாண குணங்களை அடியேன் அனுபவித்தவரையில் ஒன்றும் விடாமல் பேசி மகிழும் பாக்கியம் பெற்றது "சொலப்புகில் வாயமுதம் பரக்கும் இருவினை பற்றறவோடும்" என்ற நூற்றந்தாதிப் பாசுரத்தை நினைவூட்டுகின்றது. இந்தப் பத்து நாளிலும் காலை, பகல், இரவு என்ற மூன்று வேளைகளிலும் அடியேன் ஸ்ரீ ஸ்வாமியின் ப்ரபாவங்களை அப்போதப்போது அநுஸந்திக்கப்படும் ஸூக்திகளை நிதானமாகக்கொண்டு பரக்க உபந்யஸித்து க்ருதார்த்தனானேன். காலை வேளைகளில் ஸேவிக்கும் அருளிச்செயல்களில் ஒரு பாசுரத்தை நிதானமாகக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமியின் பெருமைகளையே பேசி முடிப்பேன். இரவு நடைபெறும் திருவாய்மொழி ஸேவையின் முடிவிலும் அப்படியே. வட நாட்டிலிருந்து ஸ்வாமியின் சிஷ்யர்கள் (தமிழ் அறியாதவர்கள்) சில பலர் வந்திருந்தபடியால் அவர்களுடைய த்ருப்திக்காக இந்தி பாஷையிலும் பேசினேன். பகல் வேளைகளில் வித்வத்ஸபை விலக்ஷணமாக நடைபெற்றது. அதில் ஒரு நியமம் வைத்திருந்தேன். அதாவது முந்துற முன்னம் ஸ்ரீ ஸ்வாமியின் ப்ரபாவத்தைப் ப்ரக்கப் பேசியே வேறு ப்ரவசனங்கள் ஆரம்பம் செய்யவேணுமென்று. அப்படி ஸ்வாமியின் ப்ரபாவத்தைப் பேச அடியேனுக்குத் தவிர வேறு ஒருவர்க்கும் பாக்கியம் இல்லாமையால் ஒவ்வொருநாளும் ஸபையின் உபக்ரமத்தில் ஸம்ஸ்க்ருத பாஷையில் சித்ரகவித்வத்தை முற்கொண்டு அரைமணி காலமும் ஒருமணி காலமும் உபந்யஸித்து வந்தேன். ஆகப் பத்து நாட்களில் மொத்தம் முப்பதுக்கு மேல் உபந்யாஸங்களைச் செய்து என்னுடைய வாக்கையும், நாக்கையும் புனிதமாக்கிக்கொண்டேன்.

ஸ்ரீமதுபயவே. வித்வான் கோமல். சேஷாத்ரியாசார்ய ஸ்வாமி மஹோத்ஸவ ஸமாப்தி தினத்தில் இங்கெழுந்தருளியிருந்து மிகப் பெரிய வித்வத் ஸதஸ்ஸில் அடியேனைப் பற்றி ஸாதித்ததொரு வார்த்தை கீழே வெளிவந்துள்ளது. அதாவது "ஆங்காங்கு உபந்யஸிப்பவர்கள் பேசும் விஷயங்கள் அண்ணா ஸ்வாமியின் உபந்யாஸங்களிலிருந்தும் அவருடைய நூல்களிலிருந்தும் க்ரஹிக்கப்பட்டவையாயிருக்குமேயொழிய புதிதான விஷயங்கள் இருக்க முடியாது என்றும் 'யதி ஹாஸ்தி ததந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்' என்றே சொல்லலாம்" என்றும் ஸாதித்தது. அதை அடியேன் ஸத்யமென்றுகொள்ளவில்லை. அதனால் இறுமாப்பு அடைபவனுமல்லேன். கோமல் ஸ்வாமியின் அந்த வார்த்தையிலிருந்து அவருடைய குணாதிசயமொன்றை மட்டுமே க்ரஹித்து உவக்கிறேன். இந்த வார்த்தையைப் பலர் அடியேனை நோக்கி ஏகாந்தமாகச் சொல்லிவிடலாம்; சொல்லுவதுமுண்டு. நம்மாழ்வார் திருவாய்மொழியில் "பலரடியார் முன்பருளிய" என்றருளிச்செய்ததுபோல ஒரு பெரிய ஸதஸ்ஸில் கோமல் ஸ்வாமி இங்ஙனே ஸாதித்தது மாத்ஸர்யமற்ற அவருடைய மனப்பான்மையொன்றையே காட்டி நிற்கும். "அந்யோந்ய வைர ஜநநி விஜஹாது அஸூயா" என்கிற தேசிகனுடைய ஆசாஸனம் அந்த ஸ்வாமி பக்கலிலே பலேகரஹியாயிருப்பதைக்கண்டு மட்டும் உள்ளம் பூரிக்கிறேன். அந்த ஸ்ரீ ஸூக்தியை அவருடைய ஆசீர்வாதமாகவே கொள்ளுகிறேன். இந்த மஹாகுணம் மற்றையோர்க்கு அநுகரிக்கவும் போகாது என்பதை விஜ்ஞாபிக்காமலிருக்க முடியவில்லை.

# அபூர்வார்த்த ரத்னநிதி
(முன் தொடர்ச்சி)

## 119. துவளில்மாமணிமாடமோங்கு துலைவில்லிமங்கலம்

திருவாய்மொழியில் தோழிபாசுரமாக அமைந்த மூன்று பதிகங்களில் இடைப் பதிகமிது. ஆழ்வார் திருநகரியைச்சார்ந்த நவதிருப்பதிகளுள் இரட்டைத் திருப்பதியென வழங்கப்படுவது துலைவில்லிமங்கலம். தேவபிரானும் அரவிந்தலோசனனுமாகிறவெம்பெருமான்கள் இருவர் இங்கு ஸந்நிதானம் பண்ணியிருக்கையாலே இது இரட்டைத் திருப்பதி எனப்படுகிறது. இப்பதிகத்திலுள்ள பாசுரங்களுக்கு விலக்ஷணமானதோர் ஏற்றமுண்டு. அதனை மணவாளமாமுனிகள் நூற்றந்தாதியில் "மாறன்—துவளறு தன்சீலமெல்லாம் சொன்னான்" என்கிற ஸ்ரீஸூக்தியினால் காட்டியருளினர். "கீழும் மேலும் எம்பெருமான் பெருமை சொல்லுகிறது; இதில் ஆழ்வார்தம் பெருமை சொல்லுகிறது" என்று ஈட்டிலருளிச்செய்து வைத்தார். அதைத்தழுவியே மாமுனிகள் 'மாறன்-தன்சீலமெல்லாம் சொன்னான்' என்று பாசுரமிட்டருளினர். இப்பதிகத்தில் "பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்" என்கிற பாசுரம் திகழ்வதுகொண்டு இங்ஙனே அருளிச் செய்ததாகச் சிலர் நினைக்கலாம். அதுபற்றியுமிருக்கலாம். இப்பதிகத்திலுள்ள *அமுதமென்மொழியாள் *உரைகொளின்மொழியாள் என்பனபோன்ற அடைமொழிகள் ஆழ்வாருடைய பெருமையை மிகமிகக் காட்டுமவை. இது தோழி பாசுரமாயிருந்தாலும் பேசுகிறவர் ஆழ்வாரேயன்றோ! அவர் தம்முடைய திருவாய்மொழிக்குக் கொள்ளை கொள்ளையான உரைகள் (வ்யாக்யானங்கள்) அவதரிக்கப் போகின்றனவென்று உட்கண்ணால் தெரிந்துகொண்டேயன்றோ "உரைகொளின்மொழியாள்" என்றார்! பல உரைகளைக் கொள்ளவல்ல செவிக்கினிய செஞ்சொல்லை அருளிச்செய்பவர் ஆழ்வார் என்று தெரிவித்தபடி. திருவாய்மொழிக்கு அவதரித்த உரைகள்—ஆறாயிரம், ஒன்பதினாயிரம், இருபத்துநாலாயிரம், ஈடுமுப்பத்தாறாயிரம், பன்னீராயிரம் என்பனவன்றோ! இவ்வளவேயோ? ஆசார்யர்களின் காலத்திலேயே சில தமிழர்கள் உரையிட்டிருந்ததாக ஈட்டில் காட்டப்பட்டுள்ளது. "அமுதமென்மொழியாள்" என்கிற பாசுரத்தை நாதமுனிகள் திருவுள்ளத்திற் கொண்டே திருவாய்மொழிக்குத் தனியனிடும்போது "பக்தாம்ருதம்" என்று தொடங்கினார். இந்தத் துவளில்மாமணிமாடப்பதிகத்தில் உய்த்துணரத்தக்க ஆழ்வார் பெருமைகளை வ்யாக்யானங்கள் கொண்டு அறிக.

## 120. தூவிரிய மலருழக்கித் துணையோடும் பிரியாதே.

பெரிய திருமொழி மூன்றாம்பத்தில் ஆறாவது பதிகத்தின் தொடக்கம் இது. வயலாலி மணவாளனுக்குத் தூதுவிடும் பதிகம் இது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் தூதுவிடும் பதிகங்கள் நான்கு அமைத்துள்ளார். முதல் பத்தில் *அஞ்சிறைய மட நாராய்*, ஆறாம்பத்தில் *வைகல்பூங்கழிவாயும் *பொன்னுலகாளீரும், ஒன்பதாம் பத்தில் *எங்கானலகங்கழிவாய்*- ஆக நான்கு பதிகங்கள் தூது விடுவன. திருமங்கையாழ்வாருடைய தூது *தூவிரியமலருழக்கி* என்ற பதிகத்தில்

நான்கு பாசுரங்களே. மேலே ஒன்பதாம் பத்தில் ☼காவார் மடல் பெண்ணை* என்ற திருப்புல்லாணிப் பதிகத்தில் ஒன்றிரண்டு பாசுரங்கள் தூதுவிடுவன. திருநெடுந் தாண்டகத்தில் ☼தேமருவு பொழிலிடத்து☼ செங்காலமடநாராய்☼என்ற இரண்டு பாசுரங்கள் தூது விடுவன. இது நிற்க, இப்பொழுது நாம் எடுத்துக்கொண்ட ☼தூவிரிய மலருழக்கிப் பதிகத்துக்கு ஒரு விசேஷமுண்டு. (இப்பதிகத்தில்) பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் அவதாரிகை தொடங்கும்போதே "நஞ்சீய ருடைய நோவிலே பெற்றி அறியப்புகுந்து இங்குத்தைக்கு வேண்டியிருக்கிற தென்னென்று கேட்க ☼தூவிரிய மலருழக்கி பாட்டுக் கேட்கவும் பெருமாள் எழுந் தருள முன்னும் பின்னும் சேவிக்கவும் வேண்டியிரா நின்றேனென்றருளிச் செய்ய" என்றுள்ள ஸ்ரீஸூக்திகள் பரம போக்யமானவை. நம்பெருமாள் ஸந்நிதியில் பகல் பத்து ஏழாம் திருநாளன்று அரையர் வ்யாக்யானம் ஸேவிக்கத் தொடங்கும்போது காத்திருந்து இந்தச் செவிக்கினிய செஞ்சொற்களைக் கேளாதார்செவிகள் செவியல்ல.

## 121 தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம்

இது மணவாள மாமுனிகளின் ஆர்த்தி ப்ரபந்தத்தில் 55ஆம் பாசுரம்

தென்னரங்கர் சீரருளுக் கிலக்காகப் பெற்றோம்
திருவரங்கம் திருப்பதியே யிருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை யுணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்
முழுதும் நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்
பின்னையொன்று தனில் நெஞ்சு பேராமற்பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும் பெற்றோமே.

☼ ☼ ☼—மாமுனிகள் தம்முடைய பெருமைகளைத் தாமே வெளியிட்டருளும் பாசுரமிது. ஆசாரியர் திருவருளால் பெற்ற பேறுகளை வாய்விட்டுப் பேசி வெளி யிடுவது க்ருதஜ்ஞதையின் பரீவாஹமாதலால் இது தற்புகழ்ச்சியாகாது. ☼பெருங் கேழலார் தம் பெருங் கண்மலர்ப் புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம், ஒருவர் நம்போல் வருங்கேழ்பவருளரே☼ (திருவிருத்தம்) என்பது முதலான பாசுரங்களினால் நம்மாழ்வார் போல்வார் அநுஸந்தித்த கட்டளையிது. தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெறுகையாவது—தம்மை அப்பெருமான் ஆசார்ய பதவியில் அமர்த்தித் தான் சிஷ்யனாக இருந்தது. "தேவனுறை திருப் பதியே" என்றும் பாடமுள்ளது. "மதுரகவி சொற்படியே நிலையாக"=ஸ்ரீவசன பூஷணத்தில் "உண்டபோதொரு வார்த்தையும் உண்ணாதபோதொரு வார்த்தை யும் சொல்லுவார்" என்று தொடங்கி யருளிச்செய்த ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந் தேயம். ☼தேவு மற்றறியேன் குருகூர்நம்பி பாவினின்னிசை பாடித்திரிவனே* என்றாற் போன்ற அத்யவஸாய முடைமை சொல்லிற்றாயிற்று.

இப்பாசுரத்தில் "பிறர்மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும் பெற் றோமே" என்றதுதான் மிகவும் ஸாரமானது. முமுக்ஷுப்படியில் "இப்படி

யிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்ற மறிந்துகந்திருக்கையும்'' என்றவிடத்து வ்யாக்யானத்தில் ''கீழ்ச்சொன்னவையெல்லா முண்டானாலும் உண்டாக அரிதாயிருப்ப தொன்றிறேயிது'' என்று மாமுனிகள் தாமே அருளிச் செய்ததுகொண்டு இப் பேற்றின் அருமைபெருமைகளை யுணர்க.

## 122 தேனமருஞ்சோலைத் திருவரங்கர்

திருவரங்கக் கலம்பகத்தில் இது இருபத்தைந்தாம் பாட்டு. அம்மானைப் பாட்டெனப்படும். பெண்டிர்க்குப் பந்தடித்தல் போல அம்மானையாடுதலும் ஒரு விளையாட்டு. திருவாய்மொழியில் மின்னிடை மடவார் பதிகத்தில் ''என்னுடைய பந்துங் கழலும் தந்து போகு நம்பீ'' என்கிற (முதற்பாசுரத்தின்) பின்னடியினால் பராங்குச நாயகிக்கும் எம்பெருமானுக்கும் இத்தகைய விளையாடல் நடைபெற்றதாக அறிகிறோம். இங்கு, பெண்டிர் இருவரோ மூவரோ கூடி அம்மானை யாடுவதாக வைத்துப் பாசுரம் பாடுகிறார் பிள்ளைப் பெருமாளையங்கார். பாசுரம் வருமாறு:

''தேனமருஞ் சோலைத் திருவரங்க ரெப்பொருளும்
ஆனவர்தாம் ஆண்பெண் அலியலர்காண் அம்மானை
ஆனவர்தாம் ஆண்பெண் அலியலரே யாமாகில்
சானகியைக் கொள்வரோ தாரமாய் அம்மானை
தாரமாக் கொண்டதுமோர் சாபத்தால் அம்மானை'' என்பது.

திருவாய்மொழியில் ''ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்'' என்கிற பாசுரத்தை யுட்கொண்டு முந்துற முன்னம் ஒருத்தி பாடினாள். ஆராமம் சூழ்ந்த அரங்கத்து நாதர் வஸ்து பரிச்சேத ரஹித ராகையாலே எல்லாப் பொருள்களுமாக இருக்கச் செய்தேயும் ''ஆணுமல்லர் பெண்ணுமல்லர் அலியுமல்லர்'' என்று பாடிக்கொண்டே அம்மானையாடினாள். (இதன் கருத்தை மேலே விவரிப்போம்.) இதைக் கேட்ட மற்றொரு பெண் ''ஆணும் பெண்ணும் அலியும் அல்லராகில் சீதையைத் தேவியாகக் கொண்டது எங்ஙனம்?'' என்று கேள்வி கேட்டுக் கொண்டே அம்மானை ஆடினாள். அதற்கு மற்றொருத்தி ''தாரமாக் கொண்டதுமோர் சாபத்தால்'' என்று விடை கூறிக்கொண்டே ஆடினாள். இங்கு 'சாபத்தால்' என்றதில் சிலேடை உள்ளது. சாபம் என்பது வடசொல் அதற்குச் சபித்தல் என்று பொருள். வில் என்ற பொருளுமுண்டு. தத்வத்ரயத்தில் ஈச்வர ப்ரகரணத்தில் ''அவதாரங்களுக்கு ஹேது இச்சை.........பல ப்ரமாணங்களிலும் ப்ருகு சாபாதிகளாலே பிறந்தான் என்கையாலே அவதாரங்களுக்கு ஹேது கர்மமாக வேண்டாவோ வென்னில், அவை தன்னிலே சாபம் வ்யாஜம், அவதாரம் ஐச்சமென்று பரிஹரித்தது.'' என்றவிடத்து மணவாளமாமுனிகள் வ்யாக்யானத்தில் எடுத்துக் காட்டப்பட்டுள்ள உத்தர ஸ்ரீ ராமாயணாதி ப்ரமாண வசனங்களினால் சாபவரலாறு அறியத்தக்கது. ''சாபத்தாலம்மானை'' என்றவிடத்து ஜநக சக்ரவர்த்தி வில்முறி என்று வைத்திருந்த வ்யாஜத்தின்படி சாபத்தை (வில்லை) முறித்ததனால் ஸீதா விவாஹம் ப்ராப்தமாயிற்று என்றது வினோதப் பேச்சு. ''ஆண் பெண் அலியலர் காண்'' என்றதன் கருத்தைத் திருவாய்மொழியின் வ்யாக்யானங்கள் விவரித்துள்ளன. நம்முடைய திவ்யார்த்த தீபிகையின் சுருக்கமாவது.

"(ஆணல்லன்) எம்பெருமானைப் பேசித் தலைக்கட்டுவது மிகவும் ஆயாஸ ஸாத்யம் என்கிறார். ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்—ஸகலவஸ்து விலக்ஷணன் என்றபடி. ருக்வேத ஆரண்யகத்தில் ஓதப்பட்டுள்ளதை அடியொற்றி இந்தப் பாசுரம். இப்பாசுரத்தை பட்டர் இங்ஙனம் உபந்யஸித்துக் கொண்டிருக்கையில் கேட்டிருந்த ஒரு தமிழன், உலகத்திலுள்ள பொருள்கள் ஸ்த்ரீலிங்க பும்லிங்க நபும்ஸகலிங்கங்களிற் சேர்ந்தல்லது இருக்க மாட்டாவே, எம்பெருமான் இந்த மூன்றுபடியிலும் சேர்ந்திலன் என்றால் சூன்யம் என்று சொன்னபடியாகுமே, பரப்ரஹ்மம் சூன்யம் என்றோ ஆழ்வார் அருளிச்செய்வது?" என்று கேட்டானாம். அதற்கு உத்தரமாக பட்டர் அருளிச்செய்தது—"பரப்ரஹ்மம் சூன்யவஸ்து என்று சொல்வது ஆழ்வார்க்கு விவக்ஷிதமாகில் 'ஸாமாந்யே நபும்ஸகம்' என்றபடி 'ஆணல்ல பெண்ணல்ல அல்லா அலியுமல்ல' என்று அருளிச்செய்திருப்பார். அங்ஙனன்றியே 'அல்லன் அல்லன் அல்லன்' என்றே (ஆண்பாலுக்குரிய அன் விகுதியை யிட்டு) அருளிச் செய்திருக்கையாலே எம்பெருமான் ஸாமாந்ய புருஷனல்லன் புருஷோத்தமன் என்று தெரிவிக்கப்பட்டதாகாதோ?" என்று. இதைக் கேட்டு அவன் போரவுகந்தான்" என்பது.

ப்ரஹ்மஸ்ரீ தாக்ஷிண்ய கலாநிதி சாமிநாதையரவர்கள் வாழ்ந்த காலத்தில் நமது சென்னை யுபன்யாஸ கோஷ்டியில் ஒரு நாள் ப்ராஸங்கிகமாக இந்த அம்மானைப் பாட்டை எடுத்துரைக்க நேர்ந்தது. உபந்யாஸம் முடிந்த பிறகு ஐயரவர்கள் சிறிது தூரம் என்னோடு கூடவே வந்து "ஐயங்கார் ஸ்ரீரங்கநாத பக்தராகையாலே ஸ்ரீரங்கநாதன் விஷயமாக இவ்வம்மானைப்பாட்டை அமைத்தார். தாங்கள் தேவப்பெருமாள் பக்தராகையாலே தேவப்பெருமாள் விஷயமாக ஒரு அம்மானைப் பாட்டுப் பாடலாகுமோ?" என்றார். அப்போதே அவரைக் காரில் உட்காரவைத்துக்கொண்டு ஜாகைக்குச் சென்று ஒரு பாட்டு எழுதித் தந்தேன். அது வருமாறு:

"ஆங் குவலயத்தடஞ் சூழத்திகிரிவாழ்பரமர்
தாங்குவளையாழித் தடக்கையர்காண் அம்மானை
தாங்குவளையாழித் தடக்கையரே யாமாகில்
ஓங்கு மடியார்க்கவையேன் ஒற்றிவைத்தார் அம்மானை
ஒற்றிவைத்த தன்னார்க்கு உறுகடனால் அம்மானை"

இதைக் கண்டு அவர் மிகவுமுகந்தார். இதைச் சிறிது விவரிக்கிறேனிங்கு. "அழகிய குவலயத் தடங்கள் சூழ்ந்த அத்திகிரியிலே வாழும் தேவப்பெருமாள் தங்க வளைகளையும் மோதிரங்களையும் தரித்துள்ள திருக்கையை உடையவர்" என்று சொல்லிக் கொண்டு அம்மானையாடினாள் ஒருத்தி. 'வளை' என்று கையிலணியும் வளைக்கும் பெயர். சங்கிற்கும் பெயர். ஆழி யென்று மோதிரத்திற்கும் பெயர், சக்கரத்திற்கும் பெயர். ஆக சங்கு சக்கரமணிந்தவர் தேவப்பெருமாள் என்பது ஒருவகைப்பொருள். தங்க வளைகளையும் மோதிரங்களையுமணிந்த மஹா தனிகர் என்பது மற்றொரு பொருள். இதைக் கேட்ட மற்றொருத்தி வினவுகிறாள். "அப்படிப்பட்ட மஹா தனிகராயிருக்கச் செய்தே அடியார்க் கவையேன் ஒற்றிவைத்தது?' என்றுஒற்றிவைத்தல் என்பதற்கு இரண்டு பொருள். அடகு வைத்தல் என்பது ஒரு பொருள். மற்றொரு பொருளாவது "தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ்

திருச் சக்கரத்தின் கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று'' என்றபடியே பக்தர்களின் தோளிலே அங்கனம் செய்வது. உயர்ந்த பொருள்களை அடகுவைப்பது கடன் வாங்குவதற்கேயாதலால் அத்தனை பெரியமஹா தனிகர் அடகுவைக்க வேண்டிய காரணமென்ன? அதிலும் தம்மிற்காட்டிலும் தாழ்ந்தவர்களிடத்து அடகுவைத்தது ஏன்? என்பது கேள்வியின் உட்கருத்து. விடை கூறுமவள் "ஒற்றிவைத்த தன்னார்க்கு உறு கடனால்'' என்றாள். இங்குக் கடன் என்றதற்கு இரண்டு பொருள்; ருணம் என்பதும் கடமை என்பதுமாம். எப்படிப்பட்ட தனிகர்க்கும் கடன் அதிகமாகி விட்டால் அடகுவைக்க நேருமே என்பது ஒரு பொருள். திருவாழி திருச்சங்குகளை பக்தர் தோளில் ஒற்றி வைத்தது சாஸ்த்ரக் கட்டளையாகிய கடமையினால் என்பது மற்றொரு பொருள். இந்த விவரணத்தையும் சாமிநாதையரவர்கள் கேட்டு மிக மிக வுவந்தார். இது நிகழ்ந்தது 1934ஆம் வருடத்தில் என்று ஞாபகம். இதை அவர் அப்போதே ஒரு ஸஞ்சிகையில் அச்சிட்டு வெளியிட்டிருப்பதாகவும் ஞாபகம்.

## 123. தையல் நல்லார்கள் குழாங்கள்

"தையனல்லார்கள் குழாங்கள் குழிய குழுவினுள்ளும்
ஐயநல்லார்கள் குழிய விழவினும் அங்கங்கெல்லாம்
கைய பொன்னாழிவெண் சங்கொடும்காண்பான் அவாவுவன்நான்
மைய வண்ணாமணியே முத்தமே என்றன்மாணிக்கமே''

திருவிருத்தத்தில் 84ஆம் பாசுரமிது.

எம்பெருமானைப் பெண்களின் கோஷ்டியிலும் சிறந்த ஆடவர்களின் திரளிலும் காண அவாவுவதாகக் கூறப்பட்டுள்ளது இப்பாட்டில். பெரியாழ்வார் கதிராயிரமிரவி பதிகத்தை "எம்பெருமானைக் கண்டதுண்டோ?'', என்று சிலர் வினவுவதாகவும் "ஆம் கண்டதுண்டு; இன்னஇடத்திலே கண்டோம்'' என்று சிலர் விடையிறுப்பதாகவும் அமைத்தருளினர். "மாமணிவண்ணனை மருவுமிடம் நாடுதிரேல்'' என்று கேள்வியைவைத்து "பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறி துவரை எல்லாரும் சூழச்சிங்காசனத்தே இருந்தானைக் கண்டாருளர்'' என்று பெண்டிர் திரளில் கண்டமையைக் கூறிவைத்தார். மற்றொருபாசுரத்தில் "நாந்தகம் சங்கு தண்டு நாணொலிச்சார்ங்கம் திருச் சக்கரம் ஏந்து பெருமையிராமனை இருக்குமிடம் நாடுதிரேல்'' என்று வினாவைவைத்து "காந்தள் முகிழ்விரல் சீதைக்காகிக் கடுஞ்சிலை சென்றிறுக்க வேந்தர் தலைவன் சனகராசன்தன் வேள்வியில் கண்டாருளர்'' என்று ஆடவர் திரளில் கண்டமையைக் கூறிவைத்தார். எம்பெருமான் ஸர்வவ்யாபியாய் இருக்கச் செய்தேயும் விபவாவதாரங்களில் சிற்சில விடங்களில் சிறப்புற்றோங்கு மாற்றைக் கூறியவாறு. இப்பாசுரத்தை ஒருபுடை நினைவூட்டுமாறு திருவரங்கத்தமுதனார் இராமாநுச நூற்றந்தாதியில் ஒரு பாசுரம் பாடியுள்ளார். அதாவது.

"உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தொறும் திருவாய்மொழியின்
மணந்தரும் இன்னிசை மன்னுமிடந்தொறும் மாமலராள்
புணர்ந்த பொன்மார்பன் பொருந்தும் பதிதொறும்புக்குநிற்கும்
குணந்திகழ் கொண்டல் இராமாநுசனெங் குலக்கொழுந்தே.''

இதற்கு நம்முடைய தீபிகையுரை வருமாறு: "ஞானம்தலையெடுத்த மஹான்களுடைய திரள் எங்கெங்கிருக்கின்றதோ அங்கெல்லாம் எழுந்தருளியிருப்பவரும் திருவாய்மொழியின் பரமபோக்யமான இசை எங்கெங்கு நிகழ்கின்றதோ அங்கெல்லாம் ஸேவிஸாதிப்பவரும் ச்ரியப் பதியான ஸர்வேச்வரன் எங்கெங்கு ஸந்நிதானம் பண்ணுகிறானோ அந்தத் திருப்பதிகளெங்கும் புகுந்து நிற்பவருமாவர் எம்பெருமானார் என்றூராயிற்று! யோகந்தோறும் என்பதற்கு கூட்டந்தோறும், என்று மணவாளமாமுனிகள் வ்யாக்யானம். "அணியரங்கன் திருமுற்றத்தடியார் தங்களின்பமிகு பெருங்குழுவு கண்டு யானு மிசைந்துடனே என்று கொலோ இருக்கு நாளே" (பெருமாள் திருமொழி) என்றபடி மஹாபக்தர்களுடைய கோஷ்டிகளில் அந்வயித்திருப்பது பரமபுருஷார்த்தமாதலால் அதனைப் பெற்றிருப்பார் எம்பெருமானார். "குருகூர் நம்பி பாவினின்னிசை பாடித்திரிவனே" என்ற சரமபுருஷார்த்த நிஷ்டர்களுடைய கோஷ்டியிலும் அந்வயித்திருப்பர். பதியே பரவித் தொழும் தொண்டருடைய திரளிலும் கலந்து பரிமாறுவர்.

# 124. தொழுகையுமிவை கண்டவசோதை

பெருமாள் திருமொழியில் ஏழாவது பதிகம் தெய்வத்தேவகி புலம்பிய புலம்பலாக ஸ்ரீகுலசேகரப் பெருமாளால் அமைக்கப்பட்டுள்ளது. அத்திருமொழி தன்னிலேயே ஒன்பதாவது பதிகம் தயரதன் தான் புலம்பியபுலம்பலாக அமைக்கப்பட்டுள்ளது. அதில் ஒரு விசேஷமுமில்லை. தெய்வத்தேவகி புலம்பிய புலம்பலாக அமைந்த *ஆலை நீள் கரும்பு பதிகத்தில் ஒவ்வொரு பாட்டும் இன்சுவையே வடிவெடுத்தது. அது தன்னிலும் 'முழுதும் வெண்ணெயளைந்து தொட்டுண்ணும்" என்னும் பாசுரம் அருளிச் செயல்கள் எல்லாவற்றுள்ளும் அருமையான தென்னலாம்' அப்பாசுரத்தின் மூன்றாமடியில் கண்ணபிரானுடைய அழுகையையும் நான்காமடியில் கண்ணபிரானுடைய தொழுகையையும் பேசியுள்ளார் ஆழ்வார். கண்ணபிரானுடைய அழுகையைப் பலவிடங்களிற் காண்கிறோம். தொட்டிற் பருவமேபிடித்து அவன் அழுவதை "ஐயா அழேலழேல் தாலேலோ" "கோனே அழேலழேல் தாலேலோ" முதலிய பலபாசுரங்களால் அறிகிறோம். *முழுதும் வெண்ணெயளைந்து பாசுரத்தில் காட்டப்பட்டுள்ள அழுகை தாயெடுத்த சிறுகோலுக் குளைந்ததனாலாயதென்பது தெரிந்ததே. உடனே அவன் அசோதையைத் தொழுததாகச் சொல்லப்படுகிறது. அப்போது அசோதை ஏதோவொரு காரியம் செய்திருக்கவேணும். அதற்கு இருய்த்த கண்ணபிரான் "அம்மா! இனி நான் வெண்ணெய் இருக்குமிடத்திற்கே வருவதில்லை. இந்த விசை என்னை மன்னித்துவிடு" என்று சொல்லிக் கைகூப்பி நின்றதாகத் தெரியவருகிறது. இந்தப்பாசுரம் தேவகிப் பிராட்டியினுடையதாகக் காண்கிறது. மதுரையில் சிறைக்கூடத்திலிருந்து புலம்புகிறவளுக்குத் திருவாய்ப்பாடியில் நடந்த இவ்வற்புதச்செய்தி எங்ஙனே தெரிய வந்ததென்று விமர்சிக்கவேணும். மற்றொருகால் விமர்சிப்போம். எல்லாரையும் தொழுவித்துக்கொள்ளப் பிறந்தவன் தான் தொழுவது" "கோயம் குண:? கதர கோடிகத:? கியாந்வா? கஸ்யஸ்துதே: பதம்? அஹோ பத கஸ்ய பூமி:?" என்ற ஆழ்வான் ஸ்ரீஸூக்திக்கே இலக்கானது.